'கேசவன்': விரோதியைப் போக்கும் சிலனுகிய கண்ணன். உள்ளுறை பொருளில் ஸ்வாதந்த்ர்யத்தையும் அந்ய சேஷத்வத்தையும் போக்கினவன்.

'திங்கள் திருமுகம்': ஸ்ரீ கிருஷ்ண கைங்கரியத்தால் குளிர்ந்து பலர்ந்த முகம். 'சேயிழைபார்': சூடகமே, தோள் வளையே என்றெல்லாம் இவர்கள் அபேட்சித்தபடியே கண்ணனும் நப்பின்னைப் பிராட்டியும் உடன் இருந்து அணிந்த அணிகளையுடையவர்கள்.

'சோன்ன': கோபிமாரின் அவஸ்தையைத் தானும் பாவனை முதிர்ச்சியால் அனுபவித்துச் சொன்ன. 'சங்கத் தமிழ்' (இங்கே) கூட்டங் கூட்டமாயிருந்து அனுபவிக்கும் தமிழ்; புலவர் கூட்டத்தால் போற்றப் பெறும் தமிழ் என்றும் கூறலாம்.

'முப்பதும் தப்பாமே': விலையில்லாத இரத்தினங்களால் செய்த ஒற்றை வடமான மாலையிலே ஓர் இரத்தினமும் நழுவக் கூடாதல்லவா? 'இங்கு இப்பரிசு உரைப்பார்': ஆய்ப்பாடியில் கோபிமார் கிருஷ்ணநுபவத்தால் பெற்ற பாக்கியத்தை ஆண்டாள் அநுகாரத்தாலே பெற்ருள். இவ்வளவு பிற்பட்ட காலத்திலுள்ளவர்களும் இப்பாசுரங்களை ஓதி ஓதிப் பேறு பெறலாம்.

பிரபந்தம் இயற்றியது இன்னர் என்று பெயரைத் தெரிவிப்பதால் இதைத் திருநாமப் பாட்டு என்றும் கூறுவர்.





கோதை பிறந்தஊர் கோவிந்தன் வாழுமூர்
சோதி மணிமாடம் தோன்றும்ஊர் — நீதியால்
நல்லபத்தர் வாழுமூர் நான்மறைக ளோதுமூர்
வில்லிபுத்தூர் வேதக்கோ னூர்.

பாதகங்கள் தீர்க்கும் பரம னடிகாட்டும்
வேத மனைத்துக்கும் வித்தாகும்—கோதைதமிழ்
ஐயைந்து மைந்தும் அறியாத மானிடரை
வையம் சுமப்பதும் வம்பு.

திருவாடிப் பூரத்துச் செகத்துதித்தாள் வாழியே
திருப்பாவை முப்பதும் செப்பினாள் வாழியே

பெரியாழ்வார் பெற்றெடுத்த பெண்பிள்ளை வாழியே
பெரும்பூதூர் மாமுனிக்குப் பின்னானாள் வாழியே

ஒருநூற்று நாற்பத்து மூன்றுரைத்தாள் வாழியே
உயர்அரங்கற்கே கண்ணி உகந்தளித்தாள் வாழியே

மருவாரும் திருமல்லி வளநாடி வாழியே
வண்புதுவை நகர்க்கோதை மலர்ப்பதங்கள் வாழியே.

## மணிவண்ணனுக்கு ஒரு மணிமாலை

நோன்பு நோற்க விரும்புகிறவர்களைப் பொதுவாக அழைப்பது முதற்பாட்டு. இதில் நோன்புக்கு உரிய காலத்தைக் கொண்டாடுகிறார்கள்; நோன்பில் இறங்கும் அதிகாரிகளைக் கொண்டாடுகிறார்கள்; நோக்கத்தை நிறைவேறச் செய்யும் கண்ணபிரானையும் கொண்டாடுகிறார்கள்.

இப்படி முயலும் நோன்புக்கு உறுப்பான நியமங்களை— அதாவது, செய்வன தவிர்வனவாகிய ப்ரவ்ருத்தி, நிவ்ருத்தி ரூபமான நியமங்களை—விளக்குவது இரண்டாம் பாசுரம்.

நோன்பினால் நாட்டுக்கு விளையும் பயனைக் குறிப்பிடுகிறது மூன்றும் பாசுரம். 'எல்லாம் கண்ணன்தான்' என்று இருக்கும் ஆய்ச்சியர், நோன்பு நோற்க அனுமதி கொடுத்த நாட்டாருக்கு மழை பெய்து வாழ்வு உண்டாகும் என்கிறார்கள். அசூயையின்றி அனுமதியும் கொடுத்தவர்களல்லவா?—கண்கூடாகப் பலன் சித்திக்கும் என்கிறார்கள்.

நான்காம் பாசுரத்திலே மழைக்கடவுளை அழைத்து நாடெங்கும் மழைபெய்ய நியமிக்கிறார்கள். இத்தகைய பக்தைகள் சொல்வதைக் கண்ணனே தன்னைத் தாழவிட்டுக் கையாளாக நிறைவேற்றி வைக்கும் போது மழை முதலியவற்றின் அதிதேவதைகள் 'ஏவல் - கூவல்' பணிசெய்வார்கள் என்பது பக்தியின் தீர்ப்பு.

ஐந்தாம் பாட்டிலே நோன்புக்கு இடையூறுகளெல்லாம், எம்பெருமானைத் தொழுது பாடிச் சிந்திக்கவே, கழிந்தொழியும் என்கிறார்கள். பகவதநுபவம் இடையூற்றுக்கு இடையூறாகும் என்பது கருத்து.

பகவதநுபவத்தைப் பாகவத சமுதாயத்தோடு கூடி அநுபவிக்க வேண்டுமென்று இனியேல் பத்துப் பாசுரங்களால் (ஆறும் பாசுரம் தொடங்கிப் பதினைந்து முடியுமளவும்) தம்மோடு ஒத்தவர்களை (பகவதநுபவ ஸஹகாரிகளை) எழுப்புகிறார்கள்.

நோன்பின் சுவடறியாதவளாய், புதிதாய், பகவத் சம்பந்தம் பெற்றிருப்பவளை எழுப்புகிறார்கள், ஆறும் பாசுரத்திலே. அடுத்த பாட்டில் சுவடறிந்தே மறந்து கிடப்பவளை எழுப்புகிறார்கள். எட்டாம் பாட்டில், கண்ணனுக்கு இனியவளை எழுப்புகிறார்கள். ஒன்பதாம் பாட்டிலே, 'கண்ணன் வந்தபோது வருகிறான்' என்று அநாதரித்திருந்தவளை எழுப்புகிறார்கள். பத்தாம் பாட்டிலே, கிருஷ்ணபக்தியிலே தலைவியாக உள்ள ஒருத்தியை எழுப்புகிறார்கள்.

அடுத்த பாட்டில், 'அவனைப் பெறுவதற்கு நானோ நோற்பேன்? வேணுமானால் அவன் தானே நோற்று வரட்டும்' என்று இருந்தவளை உணர்த்துகிறார்கள். பன்னிரண்டாம் பாட்டிலே, 'கண்ணனுக்கு ஒரு லட்சுமணன்' என்று சொல்லுமாறு பிரியாது பணி செய்யும் செல்வனின் தங்கையாகிய செல்வியை எழுப்புகிறார்கள். தன் கண்ணழகின் பெருமையை நினைத்திருந்த 'மான்விழி'யாளை உணர்த்துகிறார்கள், பதின்மூன்றும் பாசுரத்திலே.

'எல்லாரையும் நானே வந்து எழுப்புகிறேன்' என்று சொல்லிவிட்டு அப்படிச் செய்யாமல் உறங்கும் ஒருத்தியை எழுப்புகிறார்கள், பதினான்காம் பாட்டிலே. முன்பு ஒரு 'மான்விழி'யாளைத் துயிலுணர்த்தியது போல், இப்போது ஒரு 'கிளிமொழி'யாளை எழுப்புகிறார்கள், பதினைந்தாம் பாசுரத்திலே. 'எல்லாப் பெண்களும் திரண்டு நம்வாசலுக்கு வரட்டும், காண்போம்' என்று கருதிப் படுத்திருந்தவள் இவள்.

இந்த விதமாகப் பத்துப் பாசுரங்களாலும், பல்வேறு மனப்பான்மையுள்ள பக்தைகளையும் எழுப்பிக்கொண்டு எல்லாருமாகத் திரண்டு நந்தகோபர் திருமாளிகை வாசலை அடைகிறார்கள். இங்கே கோயில் காப்பானும் தோரண வாசல் காப்பானுமாகிய காவலரை எழுப்பி, அவர் அனுமதிகொண்டு மாளிகைக்குள்ளே போகிறார்கள்.

பிறகு, தாமும் கண்ணனுக்கு ஒரு காவலாக மாளிகையின் வெளிக்கட்டிலே படுத்திருந்த நந்தகோபரை எழுப்புகிருர்கள். உள் - கட்டிலே பிள்ளைக்குப் பக்கத்தில் படுத்திருந்த யசோதைப் பிராட்டியையும் எழுப்புகிருர்கள். அப்பால் கண்ணனை எழுப்பு கிருர்கள். 'இதற்கு முன்பே கண்ணனை எழுப்பாமல் முறை கேடாகச் செய்தோமே!' என்று பலதேவனையும் எழுப்புகிருர் கள். இப்படி நால்வரையும் எழுப்புவது, பதினேழாம் பாட்டிலே.

அடுத்த பாட்டிலே, புருஷகாரமாக நப்பின்னையை முன் னிட்டுக் கண்ணனை அடைவதே முறையென்று நப்பின்னைப் பிராட்டியை எழுப்புகிருர்கள். அடுத்த இரண்டு பாசுரங்களிலும், அடைந்தவர்களின் விருப்பத்தை நிறைவேற்றுவதில் 'நான் முன்னே, நான் முன்னே!' என்று ஒருவருக்கொருவர் முற்படு கின்ற நப்பின்னைப் பிராட்டி, கண்ணபிரான் என்ற இருவரை யும் துயிலுணர்த்துகிருர்கள்.

அடுத்த பாசுரத்திலே, கண்ணனைத் துயிலுணர்த்தி, 'உன் குணத்துக்குத் தோற்று வந்தோம்' என்கிருர்கள். இருபத் திரண்டாம் பாசுரத்திலே, 'அபிமானம் குலைந்து உன் கடாட்சமே தாரகமாக வந்தோம்; எங்கள் எளிமை தீர மெல்ல மெல்லக் கடாட்சிக்க வேணும்' என்று கண்ணனிடம் விண்ணப்பஞ் செய்து கொள்ளுகிருர்கள்.

இருபத்து மூன்றும் பாட்டிலே, சிங்காசனத்தில் ஆஸ்தா னம் கொண்டருளி, வந்த காரியத்தை ஆராய வேண்டுமென்று பிரார்த்திக்கிருர்கள். இந்தப் பிரார்த்தனைக்கு இணங்க, நடை யழகு தோன்ற வந்து வடிவழகு காட்டிச் சீரிய சிங்காசனத் தில் வீற்றிருந்த பெருமாளுக்குப் பல்லாண்டு கூறுகிருர்கள், அடுத்த பாட்டிலே.

இருபத்தைந்தாம் பாட்டிலே, தாங்கள் யாசித்து வந்ததை விண்ணப்பித்துக் கொள்கிருர்கள். நோன்புக்கு உரிய உபகா ணங்கள் இவை இவையென்று சொல்லி அபேட்சிக்கிருர்கள், இருபத்தாரும் பாசுரத்திலே. நோன்பு முடிந்த பின் பெறும் சம் மானத்தை விண்ணப்பித்துக் கொள்கிருர்கள் அடுத்த பாட்டிலே.

இருபத்தெட்டாம் பாசுரத்திலே, தங்கள் சிறுமையையும் அவன் பெருமையையும் சொல்லி, அவனோடு உள்ள உறவை யும் சொல்லிக் கொண்டு, பிழைகளைப் பொறுத்தருள வேண்டு கிறார்கள்.

இவர்களுடைய பரம உத்தேசம்—இப் பிரபந்தத்தின் பரம தாத்பரியம்—வெளிப்படுகிறது, இருபத்தோன்பதாம் பாசுரத் திலே.

உற்றோமே ஆவோம்;
    உனக்கோநாம் ஆட்செய்வோம்;
மற்றைநம் காமங்கள்
    மாற்று

என்று பிரார்த்தித்துத் தங்கள் மனோரதத்தைப் பூர்த்தி செய்து கொள்கிறார்கள்.

கோபிமார் பெற்ற இத்தகைய பகவதநுபவத்தை ஆண்டா ளும் பெற்றுக் கொள்கிறாள், தன்பாவனை முதிர்ச்சியினாலே. அந்த நிலையில் ஆண்டாள் அருளிச்செய்த இந்தப் பிரபந்தத்தை ஓதி ஓதி உணர்ந்து இன்றும் என்றும் மக்கள் திருமாலின் திருவருள் பெற்று இன்புறுவர் என்னும் பலச்ருதிதான் இறுதிப் பாசுரம்.



உ

# திருவெம்பாவை

பதிப்பாசிரியர் :

பி. ஸ்ரீ.



திருமலை - திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி.

1957




" வானூறும் கங்கைநிகர் மாணிக்க வாசகன் "
" திருவா சகமென்னுந் தேனினருட் காரணம்."

# திருவெம்பாவை

1

கன்னியர் கூட்டத்துள் இருவர் ஒருத்தியை எழுப்புதல்

‘ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ்
சோதியை யாம்பாடக் கேட்டேயும், வாள்-தடங்கண்
மாதே! வளருதியோ? வன்செவியோ நின்செவிதான்?’-
‘மாதேவன் வார்கழல்கள் வாழ்த்திய வாழ்த்தொலி-
[போய்
வீதிவாய்க் கேட்டலுமே, விம்மிவிம்மி, மெய்ம்-
[மறந்து,
போதார் அமளியின்மேல் நின்றும் புரண்(டு), இங்-
[ஙன்
ஏதேனும் ஆகாள், கிடந்தாள்; என்னே! என்னே!
ஈதேஎம் தோழி பரிசு’ ஏலோர் எம்பாவாய்.

பதவுரை

| | | |
|---|---|---|
| ‘ஆதியும் அந்தமும் இல்லா | - | முதலும் முடிவும் இல்லாத |
| அரும் பெருஞ் சோதியை | - | அரிய பெரிய ஜோதியானவனை |
| யாம் பாடக் கேட்டேயும், | - | நாங்கள் பாட அதைக் கேட்டும், |
| வாள் தடங்கண் மாதே! | - | ஒளியுடையதாய் அகன்ற கண்களை யுடைய, பெருமை பொருந்திய, பெண்ணே! |
| வளருதியோ? | - | இன்னமும் கண் வளர்கிருயோ? |

வன் செவியோ நின்செவிதான்?'- உன் காது உணர்ச்சி அற்றுப் போய்விட்டதா?'

'மா தேவன் வார்கழல்கள் - மகாதேவனுடைய நீண்ட வீரக்கழல் அணிந்த திருவடிகளை

வாழ்த்திய வாழ்த்து ஒலி போய்- வாழ்த்திய வாழ்த்துக்களின் ஓசை போய்

வீதிவாய்க் கேட்டலுமே - வீதியில் கேட்டவுடனே,

விம்மி விம்மி, மெய்ம்மறந்து - விம்மி விம்மி அழுது, உடலை மறந்து,

போது ஆர் அமளியின்மேல் நின்றும் புரண்டு - பூக்கள் நிறைந்த படுக்கையிலிருந்து புரண்டு,

இங்ஙன் ஏதேனும் ஆகாள் கிடந்தாள்; - இங்ஙனம் ஒன்றுக்கும்பயன்படாத வளாகிக் கிடந்தாள்;

என்னே! என்னே! - என்னஅதிசயம்! என்ன அதிசயம்!;

ஈதே எம் தோழி பரிசு!' - எங்கள் தோழியின் இயல்பு இது!'-

ஏல் ஓர் எம்பாவாய் - ஒவ்வொரு பாட்டின் இறுதியிலும் வருவது. ஏல், ஓர்—அசை. எம் பாவாய்—பாவை நோன்பை முன்னிலைப்படுத்திக் குறிப்பிடுவது.

விளக்கம்

(பெண்கள் கூட்டத்தில் ஒருத்தி, உறங்குபவள் போல வெளியே தோன்றச் செய்து தன்னைத் துயிலுணர்த்தினரோ என்று விம்மிக் கிடந்த தோழியை நோக்கி,) 'ஒளியுள்ளதாய் அமைந்த கண்களையுடைய மாதே! முதலும் முடிவும் இல்லாத அரிய பெரிய ஜோதியான இறைவனை நாங்கள் புகழ்ந்து பாட, அதைப் பெண்ணே! நீ கேட்டும் கேளாதவள் போல இன்னமும் கண்வளர்கின்றனையோ? எங்கள் பாட்டின் ஒலியைக் கேட்க முடியாத உன் காதுதான் உணர்ச்சியற்ற செவிட்டுக் காதோ?' என்று கேட்கிறாள்.

அதன்மேல் மற்றொருத்தி சொல்லுகிறாள்: 'மகாதேவன் என்ற அந்தத் தேவ தேவனுடைய நீண்ட கழல் அணிந்த திருவடி

களை நாம் வாழ்த்திப் பாட, அந்த வாழ்த்தொலிகள் போய் வீதியில் ஒலித்து அவள் காதிலும் கேட்டன; கேட்டதுமே அவள் விம்மி விம்மி அழுது தன் உடலை மறந்த நிலையில் பூம்படுக்கையிலிருந்து கீழே புரண்டு, நமது மார்கழி நீராட்டத்தில் ஒன்றுக்கும் பயன்படாதவளாகி இப்படிக் கிடந்தாள்; என்ன அதிசயம்! இது எங்கள் தோழியின் இயல்பு!' இப்படி இருவர் ஒருத்தியை எழுப்புகிறார்கள்.

விசேஷ உரை

திருவாதிரை நாளில் பெண்கள் நீராடவேண்டுமென்று தம்முள் கலந்து பேசிக் கொண்டிருந்தார்கள். அதற்கு இணங்க, திருவாதிரை நாள் அதிகாலையில் முன்னம் துயிலுணர்ந்து எழுந்த கன்னியர்கள் ஒரு தோழியைத் துயிலுணர்த்த வருகிறார்கள்; வந்து பள்ளியறை வாசலில் நிற்கிறார்கள். தலைவனாகிய இறைவன் புகழைப் பாடித் துயிலுணர்த்துகிறார்கள். அப்போது பேசும் இருவர் பேச்சாக அமைந்திருக்கிறது இப்பாசுரம்.

வாழ்த்தொலி கேட்டதும், அவர்களைப் போல் தானும் முன்னமே எழுந்து அந்த வாழ்த்தில் கலந்து கொள்ளவில்லையே என்று விம்மி அழுது புரண்டு கீழே விழுந்து கிடந்த தோழியின் நிலையை மற்றவர்கள் உள்ளபடி உணர்ந்துகொள்ளவில்லை. அதனால் தான் 'வன்செவியோ நின் செவி தான்?' என்றும், 'ஏதேனும் ஆகாள் கிடந்தாள்' என்றும் ஊகஞ்செய்கிறார்கள்.

'வாள் - தடங்கண் மாதே!': 'உன் கண்கள் விசாலமாய் ஒளி பொருந்திய பார்வையுடன் தானே இருக்கின்றன; எனவே, நீ விழித்துக் கொண்டிருந்தால், எங்களைப் பார்த்திருக்க வேண்டுமே' என்பது குறிப்பு. 'நீ குருடும் இல்லை; செவிடும் இல்லையே!' என்று பரிகசிக்கிறாள்.

'மெய்ம்மறந்து .. புரண்டு... கிடந்தாள்': உடல் நோகுமே என்ற உணர்ச்சியின்றி உருண்டு கீழே விழுகிறாள் என்பதும், அப்படி விழுந்ததையும் உணர்ந்து கொள்ளவில்லை என்பதும் குறிப்பு.

'என்னே! என்னே!: 'எங்கள் தோழியாக நீ இருக்கிருயே, இருந்தும் உன் தன்மை இதுதானு?' என்ற அதிசயமும் இகழ்ச்சியும் ஒருங்கே தொனிக்கின்றன.

இப்படி இருவர் இடித்துரைக்க, இத்தோழி எழுந்து தன் பள்ளியறை வாசலில் நிற்கும் பெண்கள் கூட்டத்தில் சேர்ந்து கொள்கிருள்.

உள்ளுறை

ஒன்பது சக்திகளில் மனேன்மனி என்னும் சக்தி ஸர்வ பூததமனி என்னும சக்தியைத் துயிலெழுப்புவது இப்பாட்டின் உட்பொருள் என்பர்.



## 2

### ஒருவரையொருவர் பரிகசிப்பதும், இன்னொருத்தி குறுக்கிட்டு இடித்துரைப்பதும்

'பாசம் பரஞ்சோதிக்(கு) என்பாய், இராப்பகல்நாம்
பேசும்போ(து); எப்போ(து) இப்போதார் அமளிக்கே
நேசமும் வைத்தனையோ! நேரிழையாய்!'-'நேரிழையீர்!
சீ! சீ! இவையும் சிலவோ?'—'விளையாடி
ஏசும் இடம்ஈதோ? விண்ணோர்கள் ஏத்துதற்குக்
கூசும் மலர்ப்பாதம் தந்தருள வந்தருளும்
தேசன், சிவலோகன், தில்லைச்சிற் றம்பலத்துள்
ஈசனார்க்(கு) அன்(பு)ஆர்? யாம் ஆர்?' ஏலோர் எம்-
[பாவாய்.

பதவுரை

| | |
|---|---|
| 'இராப்பகல் நாம் பேசும்போது- | 'இரவும் பகலும் நாம் பேசும்போதெல்லாம் |
| பாசம் பரஞ்சோதிக்கு என்பாய்;- | நீ "என்னுடைய பாசமெல்லாம் பரஞ்சோதியான இறைவனுக்கே உரியது" என்று சொல்லுவாய்; |
| இப் போது ஆர் அமளிக்கே - | இந்தப் பூம் படுக்கைக்கே |
| எப்போது நேசமும் வைத்தனையோ? - | நீ எப்போது நேசமும் வைத்துக் கொண்டாயோ? |
| நேரிழையாய்!' - | செவ்விய அணிகளை அணிந்த பெண்ணே!' |

[என்று கூட்டத்தில் ஒருத்தி உள்ளே உறங்குகிறவளை நோக்கி நகையாடித் துயில் எழுப்பினள். உள்ளே இருப்பவளும் பரிகாசமாக,]

| | |
|---|---|
| 'நேரிழையீர்! - | செவ்விய அணிகளை அணிந்த பெண்களே! |

சீ! சீ! இவையும் சிலவோ?' - சீச்சீ! இப்படிப் பரிகசித்துச் சொல்லும் சொற்கள் உங்களிடம் அதிகமாக இல்லைபோலும்!'

[என்று சொன்னாள். வேறொருத்தி குறுக்கிட்டு,]

'விளையாடி எசும் இடம் ஈதோ? - நீங்கள் விளையாடி எசிக்கொள்ளும் இடம் இதுதானோ?

விண்ணோர்கள் எத்துதற்குக் கூசும் - தேவர்கள் வணங்கக் கூச்சமடையும்

மலர்ப்பாதம் தந்தருள வந்தருளும் - அடிமலர்களை நமக்குத் தரும் பொருட்டு வந்தருளுகின்ற

தேசன், - தேஜஸ்அல்லது ஒளியை உடையவனும்,

சிவலோகன், - சிவலோகத்திற்குத் தலைவனும் ஆகிய

தில்லைச் சிற்றம்பலத்துள் ஈசனார்க்கு - தில்லைச் சிற்றம்பலத்து நடுவே கூத்தாடும் தேவருக்கு

அன்பு ஆர்? யாம் ஆர்?' - அன்புடையவர் யாவர்? நாம் எத்தகைய நிலையில் இருக்கிறோம்?'

விளக்கம்

'செவ்விய அணிகளை அணிந்தவளே! (அலங்காரச் செல்வியே!) அல்லும் பகலும் நாம் கூடிப்பேசும்போதெல்லாம், உன் பாசம் முழுவதும் பரஞ்சோதிக்கே உரியது என்று நீ சொல்வதுண்டு. அப்படிச் சொன்ன நீ இந்தப் பூம்படுக்கைக்கும் நேசத்தை எப்போது வைத்துக் கொண்டாயோ? சொல்வாயாக' என்று கூட்டத்துள் ஒருத்தி உள்ளிருந்த மாதை நோக்கிக் கேட்கிறாள்.

அதற்கு அவள், 'சீச்சீ! அலங்காரச் செல்விகளே! உங்கள் பரிகாசச் சொற்கள் இவ்வளவு தாமா? இன்னும் பல இல்லையோ?' என்று பதில் - கேள்வி கேட்கிறாள்.

இப்படி வீண் பேச்சில் காலம் கழிகிறதே என்று கருதிய வேறொருத்தி, 'நீங்கள் விளையாடி எசிக் கொள்வதற்கு வாய்ப்

பான இடம் இதுதானு? தேவர்கள் மெய்யன்பு பெற்றிராததால் வணங்கக் கூசுகின்ற அடிமலர்களை நமக்குத் தந்தருள வேண்டுமென்றே வந்தருளும் ஒளி உடையவனும், சிவலோகனும், ஸ்ரீ நடராஜப் பெருமானுமாகிய இறைவனுக்கு நாம் அடிமைகள் அல்லவா? இப்படி இந்த நேரத்தில் இங்கே விளையாடி நிற்கும் நாம் ஈசன்மீது அன்புரிமை உடையவர் ஆவதற்குத் தகுதி உடையவரோ?' என்கிருள்.

உள்ளே இருந்த மாதை நோக்கி 'நீ விரைந்துவா?' என்று அழைக்கும் குறிப்பையும் இந்தப் பாட்டில் காண்கிறேம்.

விசேஷ உரை

நேரிழையாய்!: 'நேராக நூல் பிடித்ததுபோல் பேசுகிறவளே!' என்ற குறிப்பையும் இந்த விளியில் காணலாம். இழை—நூல். இவள் பதில் சொல்லும்போது, 'நூல் பிடித்தது போலப் பேசுகிறவர்கள் நீங்களே!' என்ற குறிப்புடன் அவர்களையும் 'நேரிழையீர்!' என்று அழைக்கிருள்.

'அணிந்துகொண்ட அணிகள் அழகாய்த்தான் இருக்கின்றன; ஆனல் உண்மையான ஆபரணமாகிய குணம் அழகாய் இல்லையே!' என்ற பரிகாசக் குறிப்பையும் ஒருவருக்கொருவர் பரிமாறிக்கொண்டதாகக் கருதலாம்.

கூசும் மலர்ப்பாதம்: மெய்யன்பும் மெய்யுணர்வும் இல்லாததால் தேவர்கள் இறைவனது அடிமலர்களை ஏத்துவதற்குக் கூசுகின்றனராம். 'கூசும்' என்பதற்கு 'அஞ்சுகிற' என்றும் பொருள் கொள்ளலாம்.

தந்தருள வந்தருளும் தேசன்: இறைவன் அன்பர்களை நாடித் தானே வந்தருளும்போது அந்த அருளால் அவனுக்கே ஒரு புதிய தேஜஸ் அல்லது ஒளி உண்டாகிறது என்பது குறிப்பு.

'ஈசனர்க்கு': 'ஈசன் ஆர்க்கு' என்று பிரித்து, ஈசனுடைய கொன்றை மாலை அல்லது ஆத்தி மாலைக்கு என்று

பொருள் கொள்வோரும் உண்டு. ஆனால் இது வலிந்து கொள்ளும் பொருளே யாகும்.

### உள்ளுறை

ஸர்வ பூத தமனி என்னும் சக்தி பலப்பிரதமனி என்ற சக்தியைப் பரிகசித்து எழுப்ப முயல, பலப்பிரதமனி தானும் பரிகசித்து விட்டு எழுந்து வந்து திருக்கூட்டத்தில் கலந்து கொள்கிறாளாம். மனோன்மனி சர்வ பூத தமனி பலப்பிரதமனி என்ற மூவரும் தோழிகளுடன் நான்காவது சக்தியைத் துயிலெழுப்பப் போகிறார்களாம்.

### கவி நயம்

எதிர் எதிராக நின்று பந்து அடிப்பதுபோல் சம்பாஷணை அமைந்திருக்கிறது பாட்டின் முற்பகுதியில். குறுக்கிட்டுப் பேசுகிறவளின் வாக்கிலே பரிகாசத்தையும் விளையாட்டையும் கடந்து நிற்கும் சிவபக்தியைக் காண்கிறோம்.



## 3

### தோழியர் சம்பாஷணை

‘முத்தன்ன வெண்ணகையாய்! முன்வந்(து) எதிர்-
[எழுந்(து), “என்
அத்தன்! ஆனந்தன்! அமுதன்!” என்(று) அள்ளூறித்
தித்திக்கப் பேசுவாய்; வந்(து) உன் கடைதிறவாய்!’-
‘பத்துடையீர்! ஈசன் பழஅடியீர்! பாங்குடையீர்!
புத்தடியோம் புன்மைதீர்த்(து) ஆட்கொண்டால்,
[பொல்லாதோ?’—
‘எத்தோநின் அன்புடைமை? எல்லோம் அறி-
[யோமோ?’—
‘சித்தம் அழகியார் பாடாரோ நம்சிவனை?’—
‘இத்தனையும் வேண்டும் எமக்கு’ ஏலோர் எம்-
[பாவாய்.

பதவுரை

| | | |
|---|---|---|
| ‘முத்து அன்ன வெண்ணகை யாய்! | - | முத்துப்போல வெண்மையான பற்கள் தோன்ற நகைக்கின்றவளே! |
| முன் வந்து எதிர் எழுந்து, | - | நாங்கள் எழுந்திருப்பதற்கு முன்னமே நீ எழுந்து எங்களை எதிர்கொண்டு வந்து, |
| “என் அத்தன்! ஆனந்தன்! அமுதன்!” என்று | - | “என் அப்பனே! ஆனந்த வடிவே! எனக்கு அழிவில்லாத அமுதம் போன்றவனே!” என்றெல்லாம் |
| அள்ளூறித் தித்திக்கப் பேசு வாய்; | - | வாயில் மிகவும் நீர் ஊறும்படி இனிக்கப் பேசுவாய்; |
| வந்து உன் கடை திறவாய்!’ | - | எழுந்து வந்து உன் வாசற்கதவினைத் திறப்பாய்’ |

[என்கிறாள் கன்னியர் கூட்டத்தில் ஒருத்தி,
சிரித்துக் கொண்டே கதவைத் திறவாது நின்ற தோழியை நோக்கி.]

'பத்து உடையீர்! ஈசன் பழ அடியீர்! பாங்கு உடையீர்!' - 'பக்தி உடையவர்களே! ஈசனுக்குப் பழைய அடியவர்களே! அவன் அருகேயிருக்க உரியவர்களே!'

[என்று, தன்னை ஏளனம் செய்தவளை
அழைத்து விடை கூறப் போகிறாள் உள்ளே இருப்பவள்.]

'புத்தடியோம் புன்மை தீர்த்து ஆட்கொண்டால், பொல்லாதோ?' - 'புதிய அடிமைகளாகிய எமது புன்மையைப் போக்கி அடிமை கொண்டால், அது பொல்லாத காரியமாகுமோ?'

[என்று இடித்து விடை தருகின்றாள். இது கேட்டதும்
முன் பேசிய தோழி,]

'எத்தோநின் அன்பு உடைமை? - 'நீ இறைவனிடம் கொண்டுள்ள அன்பு வஞ்சமுடையதோ?

எல்லோம் அறியோமோ?' - உன் குணம், செயல்களையெல்லாம் பழகி வரும் நாங்கள் அனைவரும் அறியோமோ?'

[என்று சொல்லுகிறாள். அதற்கு இவள்,]

'சித்தம் அழகியார் பாடாரோ நம் சிவனை?' - 'அழகிய சித்தம் வாய்க்கப் பெற்றவர்கள் நமக்குரிய சிவபெருமானைப் பாடுவரே அன்றி இப்படி விளையாடி ஏசிக் கொண்டிருப்பார்களோ?'-

[என்று ஒரு பதில்-கேள்வி போடுகிறாள்.
இதற்கு வெளியே இருப்பவர்கள்,]

'இத்தனையும் வேண்டும் எமக்கு!'- 'உன்னைத் துயிலெழுப்ப வந்த எங்களுக்கு இத்தனையும் வேண்டும்!'-

[என்று முடிவாகப் பதில் சொல்லுகிறார்கள்.]

விளக்கம்

'முத்த நகைப் பெண்ணே! நீ முன்பெல்லாம் நாங்கள் எழுந்திருப்பதற்கு முன்னமே எழுந்து எதிர்கொண்டு வந்து, இறைவனைக் குறித்து "என் அத்தன்! என் ஆனந்தன்! என் அமுதன்!" என்றெல்லாம் வாயூறித் தித்திக்கப் பேசுவதுண்டு. அப்படிப்பட்ட நீ ஏன் இப்படி மாறிப்போய் விட்டாய்? இப்போதாவது எழுந்து வந்து கதவைத் திறவாய்' என்று வெளியே இருப்பவள் உள்ளே இருப்பவளைப் பரிகசிக்கிருள்.

அதற்கு இவள், 'ஆமாம்; நீங்கள் எல்லாம் மிகமிகப் பழைய அடியார்கள்; நாங்களோ புது அடியார்! நீங்கள் பக்தி உடையவர்கள்; இறைவனுக்கு அருகே இருக்க உரியவர்கள்! அப்பேர்ப்பட்ட நீங்கள் புதியவர்களான எங்கள் புன்மை போக்கி ஆட்கொண்டால் அது பொருந்தாதா? அது பொல்லாத செயலாகுமோ?' என்று இடித்து விடை தருகின்ருள்.

முன் பேசிய தோழி: 'நீ கொண்டிருக்கும் அன்பு வஞ்சமோ? உன்னை நாங்கள் அறியாதவர்களா? உன் குணம், செயல்கள் எல்லாம் நாங்கள் அறிந்தனவே!'

உள்ளே இருப்பவள்: 'சித்தம் அழகியார் சிவனைப் பாடுவரே அன்றி இப்படி விளையாடி ஏசுவதில் பொழுது போக்குவரோ?'

வெளியே இருப்பவர்கள்: 'ஒஹோ, உன்னை எழுப்ப வந்த எங்களுக்கு இத்தனையும் வேண்டும், அம்மா!'

விசேஷ உரை

இரண்டு தோழிகளின் சம்பாஷணையும், கடைசியாகக் கூட்டத்தார் தம்மைத் தாமே நொந்து கொள்வதும் எவ்வளவு ரஸமாய் அமைந்திருக்கின்றன! உள்ளே இருப்பவள் கதவைத் திறந்துகொண்டு வந்து மற்றவர்களுடன் கலந்து கொள்கிருள். எல்லோரும் வேருெருத்தியைத் துயிலெழுப்பப் போகிருர்கள்.

இந்தப் பாட்டிலே நகைச்சுவையும் பக்திச்சுவையும் கவிச்சுவையும் கலந்து கொழிக்கக் காண்கிருேம். சிறகு கட்டிய அம்

புகள் போலப் பறக்கின்றன வார்த்தைகள்; ஆனால் இந்தச் சொல்லம்புகள் ஒருவரையும் புண்படுத்தவில்லை. அன்பு தானே அம்பு இங்கே!

உரையாடுகிறவர்களைத்தான் எப்படிப் பிரத்தியட்சமாக்கி விடுகிறது கவிதை! எரிந்துகொண்டிருக்கும் தீப ஒளியில் முத்தைப்போல் முறுவல் செய்து கொண்டிருக்கும் தோழியைத் தோழிமார் பார்ப்பதுபோல நாமும் பார்க்கிறோம். 'இந்தப் பெண்கள், உருவில் மட்டுமா அழகியர்?—சித்தமும் அழகியார்! சிவனைப் பாடிப்பாடிப் பக்தி செய்து செய்து இந்த அழகைப் பெற்றிருக்கிறார்கள்; இந்தக் குரலினிமையையும் பெற்றிருக்கிறார்கள்' என்று ஊகிக்கலாம். இவர்களது சித்த அழகு உருவ அழகிலும் பிரதிபலிக்கிறது.

இவர்களால் துயில் எழுப்பப்பெற்றவள் கதவைத் திறவாது அதன் அருகே வந்து நின்றுகொண்டு ஆண்டவனின் திருப்பெயர்களைத் தனக்குள்ளே ஓதிய வண்ணம் இளநகை அரும்புகிறாள் என்று ஊகிப்பது பொருந்தும்.

உள்ளுறை

பலப்பிரதமனி என்னும் சக்தியும் பிறரும் பலவிகரணி என்னும் சக்தியை எழுப்புவதாகக் கருதுவர்.



## 4

### கிளி மொழியாரும் ஒளிரும் முத்து நகையாளும்

‘ஒண்ணித் திலநகையாய்! இன்னம் புலர்ந்தின்றோ?’-
‘வண்ணக் கிளிமொழியார் எல்லாரும் வந்தாரோ?’—
‘எண்ணிக்கொ(டு) உள்ளவா சொல்லுகோம்;
[அவ்வளவும்
கண்ணைத் துயின்(று) அவமே காலத்தைப் போக்-
[காதே!’—
‘விண்ணுக்(கு) ஒருமருந்தை, வேத விழுப்பொருளை,
கண்ணுக்(கு) இனியானை, பாடிக் கசிந்(து), உள்ளம்
உள்நெக்கு நின்(று)உருக, யாம்மாட்டோம்; நீயே-
வந்(து)
எண்ணிக் துறையில் துயில்!’ ஏலோர் எம்பாவாய்.

பதவுரை

[பெண்கள் கூட்டத்தில் ஒருத்தி கேட்கிறாள்:]

‘ஒள் நித்தில நகையாய்! - ‘ஒளிபொருந்திய முத்துப்போன்ற பல் வரிசை தெரியச் சிரிக்கும் பழக்கம் உள்ளவளே!

இன்னம் புலர்ந்தின்றோ?’ - இன்னும் உனக்குப் பொழுது விடிந்ததில்லையோ?’

[முத்து நகையாள் பதில் சொல்லுகிறாள்:]

‘வண்ணக் கிளிமொழியார் எல்லாரும் வந்தாரோ?’ - ‘கிளிபோல அழகாய்க் கொஞ்சிப் பேசுகிறவர்கள் அனைவரும் வந்துவிட்டார்களா?’

[கேள்விக்கு இப்படி ஒரு பதில்-கேள்வி கிடைத்ததும் அந்தக் கிளிமொழியாருள் வேறொருத்தி சொல்லுகிறாள்:]

| | |
|---|---|
| 'எண்ணிக்கொடு உள்ளவா சொல்லுகோம்; - | 'வந்தவர்களை எண்ணிக் கணக்கிட்டுக் கொண்டு உள்ளபடியே எத்தனைபேர் வந்திருக்கிறார்கள் என்று சொல்லுகிறோம்; |
| அவ்வளவும் கண்ணைத் துயின்று அவமேகாலத்தைப் போக்காதே!'- - | ஆனால் அவ்வளவு நேரம் வரை நீ கண் துயின்று பொழுதை வீணாக்கி விடலாகாது!' |

[மற்றொருத்தி சொல்லுகிறாள்:]

| | |
|---|---|
| 'விண்ணுக்கு ஒரு மருந்தை, வேத விழுப்பொருளை, கண்ணுக்கு இனியானை - | வானவர் அனைவர்க்கும் ஒப்பற்ற மருந்து போன்றவனும், வேதத்துக்குச் சிறந்த பொருளாக இருப்பவனும், காட்சிக்கு இனிமையாக இருப்பவனும் ஆகிய சிவபெருமானை |
| பாடிக் கசிந்து உள்ளம் உள்நெக்குநின்று உருக, - | பாடி உள்ளம் இளகிக் கட்டு விட்டு உருகிக் கொண்டேயிருப்பதால், |
| யாம் மாட்டோம்; - | நாங்கள் எண்ணிச் சொல்ல இயலாத நிலையிலிருக்கிறோம்; |
| நீயே வந்து எண்ணிக் குறையில் துயில்!' - | ஆதலால் நீயே எழுந்து வந்து இங்கு வந்திருப்பவர்களைக் கணக்கிட்டுப் பார்த்துத் தொகை குறைந்தால் மறுபடியும் போய்த் தூங்கு!' |

## விளக்கம்

கூட்டத்தில் ஒருத்தி உள்ளே இருப்பவளை நோக்கி, 'முத்து நகையாளே!' என்று கூப்பிட்டு, 'இன்னுமா உனக்குப் பொழுது விடியவில்லை?' என்று பரிகாசமாய்க் கேட்கிறாள். 'வண்ணக் கிளிமொழியார் எல்லாரும் வந்தாரோ?' என்று உள்ளே இருந்து வேறொரு கேள்வியே விடையாக வருகிறது.

வெளியில் உள்ளவர்களில் வேறொருத்தி, 'எண்ணிப் பார்த்து உள்ளபடியே கணக்கிட்டு உன் கேள்விக்குப் பதில் சொல்லுகி

ஞேம்; ஆனல் அதற்குள்ளே கொஞ்சம் தூங்கிக்கொண்டிருக்கலாமே என்று நீ நினைப்பது போலத் தோன்றுகிறது; அப்படிக் கண்ணைத் துயின்று தவப்பொழுதை அவப்பொழுது ஆக்கி விடாதே!' என்று சொல்லுகிருள்.

கடைசியாகக் கூட்டத்திலிருந்து வேறொரு குரல் கேட்கிறது: 'எங்களால் எண்ணிப் பார்த்துக் கணக்கிட முடியாது! ஏனென்ருல், நாங்கள் விண்ணுக்கு ஒரு மருந்தும், மண்ணிலே வேதத்தின் சிறந்த பொருளும் ஆகிக் கண்ணுக்கு இனிய காட்சியும் வழங்கத் தக்க பரம்பொருளைப் பாடுவதில் ஈடுபட்டிருக்கிருேம். காதலாகிக் கசிந்து உள்ளம் கட்டுவிட்டு நெகிழ்ந்து உருகிக்கொண்டிருக்கும் இந்த நிலையில் கணக்கிட்டுப் பார்க்கும் அந்தச் செயலைச் செய்வதற்கு இயலாதவராக இருக்கிருேம். நீயே வந்து எண்ணிப் பார்த்துத் தொகை குறைந்தால் மறுபடியும் போய் நிம்மதியாகத் தூங்கு, அம்மா!'

இப்படி இந்தக் குரலும் பரிகசிக்கவே, 'ஒண்ணித்தில நகையாள்' வெண்ணகை அரும்பிய வண்ணம் பளிச்சென்று எழுந்து வந்து 'வண்ணக் கிளிமொழியார்' கூட்டத்தில் கலந்து கொள்கிருள்.

### விசேஷ உரை

ஒண்ணித் தில நகையாய்!: 'உனக்குச் சிரிக்கத்தான் தெரியும்; காரியத்தை மறந்து விடுகிருய்; பொழுது விடிந்தது கூடத் தெரியவில்லையே!' என்பது குறிப்பு.

'போழுது புலர்ந்தின்றே?': 'பொழுது இன்னும் விடியவில்லையோ?' என்ற வினவுக்கு 'எல்லாரும் வந்தாரோ?' என்பது எதிர் வினு. 'சிலர் வந்திருக்கலாம்; பலரும் எழுந்து வருவதற்குள் நீங்கள் அவசரமாய் வந்திருக்கக்கூடும்' என்று கொஞ்சம் எரிச்சலுடன் உறக்க மயக்கத்தில் இருப்பவள் குறிப்பிடுவதாக ஊகிக்கலாம்.

மார்கழி நீர் ஆட வேண்டும் என்ற விருப்ப மிகுதியால் பெண்களின் கூட்டம் இப்படி விரைந்து வந்து ஆரவாரமிடுகிறது

என்று உறக்கத்தில் விருப்பமுள்ளவள் கருதுவது பொருந்துவதே.

கூட்டத்தில் உள்ள ஒருத்தி எண்ணிச் சொல்ல உடன்படுவதாகவும், வேறொருத்தி இறைவனைப் பாடி உருகும் எங்களால் இதை விட்டு அதைச் செய்ய முடியாது என்று கூறுவதாகவும் வருவது இப்பாட்டோவியத்தை ஓர் உயிர்ச்சித்திரமாக்கிக் காட்டுகிறது.

வண்ணக் கிளி மொழியார் : இச்சொற்றொடரிலுள்ள 'வண்ணம்' என்பதற்கு, குரல் வேறுபாட்டால் வருவதோர் அழகு என்று பொருள் கொள்ளவேண்டும்.

கண்ணுக்கு இனியான் : 'விண்ணுக்கு ஒரு மருந்து' என்றும், 'வேத விழுப்பொருள்' என்றும் வேதாந்தம் குறிப்பிடும் பரம்பொருளைக் காதலனாகக் காட்டுகிறது இச்சொற்றொடர். வேதாந்தத்தைக் கலையாக்கும் வாசகம் பாட்டின் இப்பகுதி.

உள்ளுறை

பலவிகரணி என்னும் சக்தி கலவிகரணி என்னும் சக்தியை எழுப்ப, எல்லாரும் ஆரும் சக்தியாகிய காளியை நோக்கிப் போகும் குறிப்பு இப்பாட்டின் உட்பொருள் என்பர்.



## 5

‘ கள்ளி ! கதவைத் திற ’

‘ மால்அறியா, நான்முகனும் காணு, மலையினை “ நாம்
போல்அறிவோம் !” என்(று)உள்ள பொக்கங்க
[ளேபேசும்
பால்ஊறு தேன்வாய்ப் படிறீ ! கடைதிறவாய் ’—
‘ ஞாலமே, விண்ணே, பிறவே, அறிவரியான்
கோலமும், நம்மைஆட் கொண்டருளிக் கோதாட்டும்
சீலமும் பாடி, “ சிவனே ! சிவனே !” என்(று) •
ஓலம் இடினும் உணராய், உணராய்காண் !
ஏலக் குழலி பரி(சு) !’ ஏலோர் எம்பாவாய்.

பதவுரை

[கூட்டத்துள் ஒருத்தி உள்ளே இருப்பவளை நோக்கி,]

| | | |
|---|---|---|
| ‘ மால் அறியா, | - | ‘ திருமாலும் அறியாததாய், |
| நான்முகனும் காணு, | - | பிரமதேவனும் காணுததாய் இருக்கும் |
| மலையினை | - | ஒளிமலையாகிய சிவபெருமானை, |
| “ நாம் போல் அறிவோம் !” என்று | - | “ நாங்கள் தாம் அறிவோம் போலும் !” என்று |
| உள்ள பொக்கங்களே பேசும் | - | இத்தகைய பொய்யுரைகளைப் பேசும் |
| பால்ஊறு தேன்வாய்ப் படிறீ ! | - | பாலோடு ஊறுகின்ற தேன் போன்ற பேச்சுக்களைப் பேசும் வாயை யுடைய வஞ்சகியே ! |
| கடை திறவாய் | - | வாசற் கதவைத் திறவாய் ’ |

[என்று சொல்லுகிறுள். உடனே இன்னொருத்தி, ‘ வஞ்சகியே !’
என்று அவள் கூப்பிட்டது உள்ளே இருப்பவள் காதில்
விழாதபடி உரக்கப் பேசுகிறுள்.]

| | | |
|---|---|---|
| ‘ ஞாலமே, விண்ணே, பிறவே, அறிவரியான் கோலமும், | - | மண்ணுலகமும் விண்ணுலகமும் பிற உலகங்களும் அறிந்து |

| | | |
|---|---|---|
| | | சொல்லுதற்கு அரிய சிவபெருமானது திருக்கோலத்தையும், |
| நம்மை ஆட் கொண்டருளிக் கோதாட்டும் சீலமும் | - | நம்மை வலிய வந்து ஆண்டு கொண்டருளி நமது குறைபாடுகளை நீக்கும் சீலத்தையும் |
| பாடி, "சிவனே! சிவனே!" என்று ஓலம் இடினும் | - | பாடி, "சிவனே! சிவனே!" என்று உரக்கக் கூவி ஓலமிட்டாலும், |
| உணராய், உணராய் காண்! | - | இந்தக் குறிப்பையும் உணராதிருக்கிறாயே, அம்மா! |
| ஏலக் குழலி பரி(சு)!' | - | மயிர்ச் சாந்து பூசிய கூந்தலையுடைய தோழியின் தன்மை இது! இந்தத் தன்மையையும் நீ உணர்ந்து கொள்ளவில்லை.' |

## விளக்கம்

முனைப்பு அல்லது செருக்கின் காரணமாகத் திருமாலும் பிரமதேவனும் அடிமுடி காணாதபடி ஒளிமலை வடிவாக ஓங்கி நின்றான் இறைவன். 'அத்தகைய இறைவனை நம்மைப் போன்றவர்கள் அறிந்து விட்டதாகப் பாலும் தேனும் சொட்டச் சொட்டப் பேசுவாயே, அத்தகைய பொய்யுரைகளைப் பேசும் வஞ்சகி! வந்து உன் வாசல் - கதவைத் திற' என்கிறாள் கூட்டத்தில் உள்ள ஒருத்தி உள்ளே இருப்பவளை நோக்கி.

'அந்தப் பேச்சுக்களெல்லாம் இப்போது எங்கே போய் விட்டன? பேசாமடந்தையாய் உறங்கிக் கிடக்கிறாயே!' என்பது குறிப்பு.

'வஞ்சகி!' என்று ஒரு தோழி மற்றொரு தோழியைக் கூப்பிடுவது சரியில்லை என்று கருதுகிறாள் கூட்டத்தில் இருக்கும் இன்னொருத்தி. அந்தச் சொல் உள்ளே இருப்பவள் காதில் விழாதபடி இவள் ஓலமிடுகிறாள்.

நில உலகத்தார், விண்ணுலகத்தார், பிற உலகத்தார் எவரும் அறிய முடியாத சிவபெருமானுடைய அந்தக் கோலத்தை

யும் குறிப்பிடுகிருள். அதே பரம்பொருள் எளியவர்களாகிய நம்மை ஆட்கொண்டு குறைபாடுகளைப் போக்கி அருளுகிற அந்தச் சீலத்தையும் புகழ்ந்து பாடுகிருள். பாடி, 'சிவனே! சிவனே!' என்று ஓலமிடுகிருள்.

இப்படி இவள் ஓலமிட்டும் இந்தக் குறிப்பையும் உணர்ந்து கொள்ளாமலே இருக்கிருளாம் 'வஞ்சகீ!' என்று கூப்பிட்டவள். 'அப்படிப்பட்ட நீ உள்ளே இருக்கும் தோழியின் தன்மையை உணர்ந்து கொள்ளவேயில்லை, உணர்ந்து கொள்ள மாட்டாய்!' என்கிருள்.

விசேஷ உரை

'தேன் மொழியாளே! கதவைத்திற!' என்று எழுப்புவதில் ஒருவருக்கும் ஆட்சேபம் இல்லை. 'வஞ்சகியே!' என்றும், 'மனமாரப் பொய் பேசுவாய்' என்றும் கூறியது ஒருத்திக்குப் பிடிக்கவில்லை. எனவே ஓமிட்டு, இந்த வார்த்தை அவள் காதில் விழாதவண்ணம் தடுக்க வேண்டும் என்ற முயற்சி நடைபெறக் காண்கிறோம்.

தன் குறிப்பையும் உணர்ந்து கொள்ளாமல், தோழியின் தன்மையையும் உள்ளபடி உணர்ந்து கொள்ளாமல் இருக்கிருளே இவள் என்று கூட்டத்தில் இருந்த ஒருத்தியை மற்றொருத்தி இடித்துரைப்பதாக இப்பாட்டுக்குப் பொருள் கூறுவது தான் சிறப்புடையதாகும்.

'கள்ளீ! கதவைத்திற: நாங்கள் ஓலமிட்டாலும் நீ எழுந்திருக்க மாட்டேன் என்கிருய்; இதுவோ உன் தன்மை!' என்று பொருள் கூறுவதும் உண்டு. இந்தப் பொருளில் 'ஏலக் குழலி' என்பதற்கு ஒரு குறிப்புப் பொருளும் கூறலாம். 'தலைக்கு வாசனைத் தயிலமோ, மயிர்ச் சாந்தோ பூசி மணம் ஊட்டிக் கொண்டால் போதுமா? அது தலைக்குள் கசிந்து புகுந்து மூளையில் ஊறி உணர்ச்சி ஊட்டவில்லையே!' என்பது இக் குறிப்பு.

'மால் அறியா, நான்முகனும் காணா, மலை': திருமாலும் பிரமனும் அடிமுடி தேடிக் காணாத ஜோதி மலையாகச் சிவபெருமான் காட்சி கொடுத்தார் என்ற திருவண்ணாமலைத் தலபுராணக் கதையை இங்கே குறிப்பாகக் காணலாம். திருவண்ணாமலையில் மாணிக்கவாசக சுவாமிகள் திருவெம்பாவையை அருளிச் செய்தார் என்பதற்கு இதுவும் ஒரு சான்றாகும்.

உள்ளுறை

கலவிகாமினி என்னும் சக்தியும் பிறரும் காளி என்னும் சக்தியை எழுப்பித் தங்களுடன் சேர்த்துக் கொண்டு போகிறார்கள்.



## 6

### நீராடப்போகும் வழியில் மான்விழியாள் ஒருத்தியுடன் உரையாடுவது

'மானே! நீ நென்னலே, "நாளைவந்(து) உங்களை
நானே எழுப்புவன்" என்றலும், நாணுமே
போன திசைபகராய்! இன்னம் புலர்ந்தின்றே?
வானே, நிலனே, பிறவே, அறிவரியான் [டருளும்
தானேவந்(து), எம்மைத் தலையளித்(து) ஆட்கொண்-
வான்வார் கழல்பாடி வந்தோர்க்(கு), உன் வாய்திற-
வானே உருகாய்; உனக்கே உறும்! எமக்கும் [வாய்;
ஏனோர்க்கும் தங்கோனைப் பா(டு)' ஏலோர் எம்-
[பாவாய்.

பதவுரை

[வீடு வீடாகச் சென்று தோழியர்களை எழுப்பிய பின் எல்லாரும் சேர்ந்து வீதியில் போகும் போது மான்விழியாள் ஒருத்தியை நோக்கி வேறொருத்தி சொல்லுகிறாள்.]

| | | |
|---|---|---|
| 'மானே! நீ நென்னலே. | - | 'மான்போன்ற விழியை உடையவளே! நீ நேற்று (எங்களுடன் கலந்து உரையாடிய போது), |
| "நாளை வந்து உங்களை நானே எழுப்புவன்" என்றலும், | - | 'நானே நாளை முந்தி எழுந்து வந்து உங்களைத் துயில் எழுப்புவேன் என்று எங்களிடம் சொன்னதும், (ஒருத்தி போய்விட்டாள். அவள்) |
| நாணுமே போன திசை பகராய்! | - | போன திசையை நீ வெட்கப் படாமல் கூறுவாய்! |
| இன்னம் புலர்ந்தின்றே? | - | அவள் வந்து எழுப்ப இன்னும் விடியவில்லையா? (அது இருக்கட்டும்.) |

| | |
|---|---|
| வானே, நிலனே, பிறவே, அறிவரி யான் தானே வந்(து), - | வானமும் பூமியும் பிற உலகங்களும் அறியமுடியாத சிவ பெருமான் தானே நமக்காக வலிய வந்து, |
| எம்மைத் தலையளித்து ஆட்கொண் டருளும் - | நம்மைச் சிறந்த முறையில் கருணைபுரிந்து ஆட்கொண்டு அந்தக் கருணைக்கு அறிகுறியாகக் கொடுத்தருளும் |
| வான்வார் கழல்பாடி வந்தோர்க்கு,- | நீண்ட, பெருமை பொருந்திய, கழலை அணிந்த திருவடிகளைப் புகழ்ந்து பாடி வந்திருக்கும் எங்களுக்காக, |
| உன் வாய் திறவாய் ; - | உன் வாயையும் திறந்தாயில்லை ; |
| ஊனே உருகாய் ; - | உடம்பும் உருகப் பெற்றாய் இல்லை ; |
| உனக்கே உறும் ! - | (இப்படி இருப்பது) உனக்கே பொருந்தும் ! |
| எமக்கும் ஏனோர்க்கும் தம்கோனைப் பாடு'. - | எங்களுக்கும் ஏனையோர்க்கும் தலைவனாக இருக்கும் இறைவனைப் பாடு'. |

## விளக்கம்

[முதல் ஐந்து பாடல்களில் தோழியர்களைத் துயிலெழுப்பியதையும், கதவைத் திறக்கும்படி வற்புறுத்தியதையும் தெரிந்து கொண்டோம். இந்த ஆறும் பாட்டு முதல் ஒன்பதாம் பாட்டு வரை எல்லாரும் சேர்ந்து வீதியில் செல்வதையும், அப்போது நிகழும் உரையாடலையும் தெரிந்து கொள்வோம்.]

இப்பெண்கள் மார்கழி நீராட்டம் குறித்து ஒரு சமயம் பேசிக் கொண்டிருந்தார்கள். பேசி முடித்துப் பிரிந்து போகும் போது ஒருத்தி மற்றவர்களை நோக்கி, 'நாளை வந்து உங்களை நானே எழுப்புவேன்' என்று சொல்லிப் போனாள். ஆனால், அவள் சொன்னபடியே செய்யவில்லை. அவளைத்தான் 'மானே!'

என்று அழைக்கிறாள் ஒரு தோழி. (அவள் மான்போலத் துள்ளிவந்து பேசினாள் என்பது குறிப்பு.)

'அப்படி ஒருத்தி கூறிச் சென்றாளே; அவள் போன திசை எங்களுக்குத் தெரியவில்லை. அந்தத் திசையை நீ தயவு செய்து தெரிவிக்க வேண்டுகிறோம். நாங்கள் தேடிப் பார்க்க வேணும்' என்று தோழி மான்விழியாளைப் படுக்கையிலும் முன்னிலையிலும் வைத்துப் பேசுகிறாள். 'அந்த உன் வார்த்தை எந்தத் திசையில் எந்தக் காற்று வழியாகப் பறந்து போயிற்று?' என்பது குறிப்பு.

'அவள் வெட்கப்படாமல் போன திசையை நீ வெட்கப் படாமல் சொல்லு!' என்கிறாள். 'இன்னுமா பொழுது விடிய வில்லை?' என்றும் கேட்கிறாள்.

பிறகு 'வானும் நிலமும் பிற உலகுகளும் அறியவொண் ணாத பெருமான் நம் பொருட்டாகத் தானே வலிய வந்து சிறந்த அருள்புரிந்து நம்மை ஆட்கொண்டிருக்கிறானே!' என்கிறாள்.

அந்த அருளுக்கு அறிகுறியான திருவடியை 'வான் வார் கழல்' என்கிறாள். 'அந்தத் திருவடிகளைப் பாடிவந்தோமே; அப்படியிருந்தும் நீ உன் வாயையும் திறக்கவில்லையே!' என்கி றாள். 'உன் உடம்பும் உருகவில்லையே; அம்மா, இது உனக்குத் தான் பொருந்தும்!' என்கிறாள்.

'அவன் உனக்குத் தலைவன் அல்லன் என்று வைத்துக் கொண்டாலும், எங்களுக்கும் எங்களைப் போன்றவர்களுக்கும் தலைவனாக இருப்பவனை எங்களோடு சேர்ந்து நீயும் பாடு' என்று கூறி முடிக்கிறாள். இவளை விலக்கிப் பேசுவதுபோல் பேசி முழு அன்பையும் நம்பிக்கையையும் வெளியிடுகிறாள் தோழி.

### விசேஷ உரை

மானே!: 'மானைப்போல மருண்டு விழிக்கிறவளே!' என்ற குறிப்புடன், 'மானைப்போலத் துள்ளி நடக்கிறவளே!' என்ற குறிப்பையும் காணலாம்.

இந்த மான்விழியாள் இப்போது மருண்டு மருண்டு விழிப்பதும் கண் மூடுவதுமாய் நடந்து வரும்போது, உறக்க

மயக்கத்தில் இருக்கிறாள் இவள் என்பதை உணர்ந்து கொண்ட தோழி, 'இவள் நன்றாக விழித்துக்கொள்ள வேண்டும் : விழித்துக் கொண்டு தங்களுடன் ஒரு குரலாய்க் கலந்து இறைவனைப் பாடிக்கொண்டு வரவேண்டும்' என்பதற்காகவே இப்படியெல்லாம் நட்புரிமை தோன்ற உரையாடுகிறாள்.

நட்புரிமையும் நகைச்சுவையும் பக்திச்சுவையும் கவிச்சுவையும் கூடிக் கலந்து இப்பாட்டை ஓர் அருமையான தமிழ் விருந்து ஆக்கியுள்ளன.

உள்ளுறை

உறக்க மயக்கத்தில் இருக்கும் மான்விழியாள் உலக மயக்கத்தை உதறித் தள்ளிவிடாத பக்தனை நினைவூட்டுகிறாள். இவளுடன் உரையாடும் தோழி ஒரு நல்லாசிரியனுக்கு அறிகுறி.

காளியும் வேறு சக்திகளும் ரௌத்திரி என்ற சக்தியை எழுப்புவதாக உள்ளுறை கூறுவதுண்டு.



## 7

‘ நீ நல்லவள் ; உன் உறக்கம் பொல்லாதது !’

‘அன்னே ! இவையும் சிலவோ ? பல அமரர்
உன்னற்(கு) அரியான், ஒருவன், இருஞ்சீரான் [பாய் ;
சின்னங்கள் கேட்பச் “ சிவன் ” என்றே வாய்திறப்
“ தென்ன ” என் னுமுன்னம் தீசேர் மெழு(கு) ஒப்-
[பாய் ;
“ என்னனை, என் அரையன், இன்னமு(து)” என்(று)
[எல்லோமும்
சொன்னேம்கேள், வெவ்வேறாய் ; இன்னம் துயி-
[லுதியோ ?
வன்னெஞ்சப் பேதையர்போல் வாளா கிடத்தியால் ;
என்னே துயிலின் பரிசு !’ ஏலோர் எம்பாவாய்.

பதவுரை

[போகும் வழியில் உறக்க மயக்கத்துடன் காணப்பட்ட வேறொருத்தியைத் தோழி பரிகசிக்கத் தொடங்கி,]

| | |
|---|---|
| ‘அன்னே ! இவையும் சிலவோ ? - | ‘அம்மா ! உன்னுடைய விளையாடல்களில் எழுந்து வந்து எங்களுடன் கலந்து கொண்டும் உறங்குவது போலிருக்கும் இத்தகைய விளையாடல்கள் சிலவே உள்ளன போலும் ! |
| பல அமரர் உன்னற்கு அரியான், ஒருவன், இருஞ்சீரான் சின்னங்கள் - | பல வகைப்பட்ட தேவர்களால் நினைத்தற்கும் அரியவனும், ஒப்பற்ற முதல்வனும், பெரும் புகழாளனும் இருக்கும் சிவபெருமானுக்கு உரிய வெற்றிச் சின்னங்களாகிய ஊது கொம்பு முதலியன (இசைக்க,) |

| | |
|---|---|
| கேட்பச் "சிவன்" என்றே வாய் திறப்பாய்; - | காதில் கேட்டதும் அந்த ஒலியைச் "சிவன்" என்றே கொண்டு 'சிவ சிவா!' என்று வாய் திறக்கும் இயல்புள்ளவள் நீ; |
| "தென்னா" என்னா முன்னம் - | (நாங்கள் சிவபெருமான் புகழைப் பாட விரும்பித்) "தென்னா" என்று தொடங்குவதற்கு முன்பே |
| தீ சேர் மெழுகு ஒப்பாய்; - | தீயில் சேர்ந்த மெழுகுபோல் உருகுவாய்; (அப்பேர்ப் பட்ட நீ இப்போது) |
| "என்னானை, என் அரையன் இன்னமுது" என்று - | "எனக்கு யானை போன்றவன்" என்றும், "என்னை ஆளும் அரசன்" என்றும், "எனக்கு இன்னமுதம் ஆவான்" என்றும் |
| எல்லோமும் சொன்னோம் கேள், வெவ்வேறாய்; - | நாங்கள் அனைவரும் தனித் தனியாகச் சொன்னோம்; |
| இன்னம் துயிலுதியோ? - | எழுந்து வந்து எங்களோடு கலந்த பின்பும் தூங்குகிறாயோ? |
| வன்னெஞ்சப் பேதையர் போல் வாளா கிடத்தியால்! - | மென்மையற்ற நெஞ்சை யுடைய பேதைகள்போல் சும்மா கிடக்கிறாய்! |
| என்னே துயிலின் பரிசு!' - | நித்திரா தேவியின் தன்மைதான் எவ்வளவு அதிசயமானது!' |

## விளக்கம்

'நிற்கும்போதும் நடக்கும்போதும் உறங்குகிறாயே!' என்று நாம் பரிகசிக்கிறோம் அல்லவா? அத்தகைய முறையில், போகும் வழியிலே ஒருத்தியைத் தோழி பரிகசிப்பதாக இச்செய்யுளுக்குப் பொருள் கூறுவது சிறப்புடைய தாகும்.

சிவ சின்னங்கள் கேட்டதும் 'சிவன்' என்றே கருதிக் கொட்டாவி வந்தாலும் 'சிவா' என்று கொட்டாவி விட்டுக் கொண்டே எழுந்து விடுவாளாம்.

'தென்னுடைய சிவனே! போற்றி; எந்நாட்டவர்க்கும் இறைவா! போற்றி' என்று அந்த மணிவாசகம் முழுவதும் சொன்னாலும் உருகாதவர் இருக்கும் உலகத்தில் இவளோ 'தென்னு' என்று சொல்லத் தொடங்கி முடிப்பதற்குள்ளே தீசேர் மெழுகுபோல் உருகி விடுவாளாம்.

அப்பேர்ப்பட்ட பக்தியுள்ள இவள் இன்று வேறு விதமாக நடந்து கொண்டிருக்கிறாள். 'என்னானை, என் அரையன், இன்னமுது' என்று அனைவரும் தனித்தனியே சொல்லிப் பார்த்தும், இந்தத் தோழி தானும் உடனே கலந்துகொண்டு அப்படி ஒன்றும் சொல்லாமல் வன்னெஞ்சப் பேதையர் போல் வாளா கிடந்தாளாம்.

எழுந்து வந்து கலந்து கொண்ட பின்பும், நின்றும் நடந்தும் உறங்குபவர் போலக் காணப்படுகிறாளாம். எனவே, 'நீ நல்லவள் தான்; ஆனால் உன் தூக்கம் பொல்லாதது! நித்திராதேவி கொடியவள்; அதற்கு நீ என்ன செய்வாய்?' என்று கூறி முடிக்கிறாள் தோழி.

விசேஷ உரை

அன்னே!: அனுதாபத்துடனும் அபிமானத்துடனும் கௌரவமாக விளித்து 'நீ நல்லவளாச்சே!' என்ற குறிப்புடன் பேசத் தொடங்குகிறாள். 'அம்மா! தாயே! நீயும் இப்படிச் செய்யலாமா?' என்பது குறிப்பு. 'நீ வன்னெஞ்சப் பேதையல்ல; கல்நெஞ்சக் கள்ளி அல்ல. உன் செயல்களில் சில இப்படியும் இருக்கலாமோ?' என்று சொல்லியும் சொல்லாமலும் தன் கருத்தைத் தெரியப் படுத்துகிறாள்.

என்னானை: 'எனக்கு உரிமை உடையவனை' என்றும் பொருள் கொள்ளலாம். 'எனக்கு ஆனைபோன்றவன்' என்பது சிறப்பான பொருள். போரில் யானைப்படைபோல் வாழ்க்

கைக்கு வலிமை வாய்ந்த துணையாக இருப்பவன் என்பது ஒரு குறிப்புப் பொருள்.

யானை காலைக்காட்டிப் பாகனைத் தலைமேல் தூக்கி வைத்துக் கொள்கிறதல்லவா? அப்படியே இறைவனது அருள் திருவடிகளைத் தந்து அடியவருக்கு,

நாமார்க்கும் குடியெல்லோம்

என்ற தலைமைப் பதவியையும் அளிக்கிறது என்பது விசேஷமான குறிப்பு.

தென்னா: 'தென்பாண்டி நாட்டானே!' என்றும் பொருள்படும். தென்பாண்டி நாட்டான் என்று சிவபெருமானைக் குறிப்பதும் உண்டு. 'தென்னன்' என்பதற்கு அழகன் என்ற பொருளும் உண்டு. அழகன் என்பதும் இங்கே சிவபெருமானைத்தான் குறிக்கும்.

'தென்னா தெனா' என்று இசை எழுப்பி இறைவன் பெயரைப் பாடுவதும் உண்டு. அந்த ஓசை கேட்டதுமே உருகிப் போகிறாள் என்றும் கருதலாம். 'தென்னா தெனா என வண்டு முரலும் சோலை' என்பது ஆழ்வார் வாக்கு.

உள்ளுறை

நன்னெஞ்சையும் வன்னெஞ்சம் போலச் செய்து விடும் மயக்க நித்திரையாகிய அறியாமையிலிருந்து இறையருளாலும் நன்னெஞ்சர் கூட்டுறவாலும் நன்கு விழித்துக் கொள்ளவேண்டும் என்பது உட்பொருள்.

மாளத்திரியும் வேறு சக்திகளும் சேட்டை என்னும் எட்டாவது சக்தியை எழுப்புகிறார்கள் என்று உள்ளுறை கூறுவர்.



## 8

'ஆனந்தமான காலைவேளையில் ஏழை பங்காளனையே
பாடுவோம்'

'கோழி சிலம்பச் சிலம்பும் குருகெங்கும்;
ஏழில் இயம்ப, இயம்பும்வெண் சங்கெங்கும்;
கேழில் பரஞ்சோதி, கேழில் பரங்கருணை, [லையோ?
கேழில் விழுப்பொருள்கள் பாடினோம்; கேட்டி-
வாழீஈ(து) என்ன உறக்கமோ? வாய்திறவாய்;
ஆழியான் அன்புடைமை ஆமாறும் இவ்வாறே?'
ஊழி! முதல்வனாய் நின்ற ஒருவனை,
ஏழைபங் காளனையே பாடு' ஏலோர் எம்பாவாய்.

பதவுரை

[தங்களுடன் வந்து நின்றும் வாய் பேசாமல் இருந்தவளை நோக்கி ஒரு தோழி, 'இந்த ஆனந்தமான காலை வேளையிலும் உறக்கமா?' என்று கேட்க விரும்பி, முதல் முதல் காலைப் பொழுதை வசீகரமாக வருணிக்கிறாள்.]

| | |
|---|---|
| 'கோழி சிலம்பச் | - கோழி கூவவும் |
| சிலம்பும் குருகு எங்கும்; | - (அதன் கூவுதலைக் கேட்டு) வேறு பறவைகள் எங்கும் ஒலி செய்கின்றன; |
| ஏழில் இயம்ப | - ஏழிசையை இசைவாணர் பாட |
| இயம்பும் வெண் சங்கு எங்கும்; | - வெண்ணிறச் சங்கின் ஒலிகளும் எங்கும் கேட்கின்றன; |

[இப்படி நன்றாகப் பொழுது புலர்ந்தபோது நாங்களும்]

| | |
|---|---|
| கேழ் இல் பரஞ்சோதி, | - ஒப்பற்ற பரஞ்சோதியையும், |
| கேழ் இல் பரங்கருணை, | - (அந்த இறைவனது) ஒப்பற்ற பெருங் கருணையையும், |
| கேழ் இல் விழுப் பொருள்கள் | - அந்தக் கருணையினால் கிடைக்கும் ஒப்பற்ற சிறந்த பொருள்களையும் |

பாடினேம்; கேட்டிலையோ? - நாங்கள் அனைவரும் பாடினேமே; அது உன் காதில் விழவில்லையா?

ஈது என்ன உறக்கமோ? வாய் திறவாய்; - இப்போது எங்களுடன் வந்து நின்றும் உறங்குவது போல் மயங்கி நிற்கும் உன்னுடைய இந்த உறக்கம் எத்தகைய உறக்கமாகும்? வாய் திறந்து பதில் சொல்லு;

ஆழியான் அன்புடைமை ஆமாறும் இவ்வாறோ? - அன்புக் கடல் என்று சொல்லப் படும் இறைவனிடம் அன்புடையவள் என்று பெயரெடுத்தாயே, இதுதானு அதற்கு அடையாளம்?

ஊழி முதல்வனாய் நின்றஒருவனை, - உயிர்களெல்லாம், பொருள்களெல்லாம் ஒடுங்கி நிற்கும் ஊழிக் காலத்திலே ஒப்பற்ற தலைவனாக நிற்பவனை,

ஏழை பங்காளனையே பாடு - அருட் சக்தியாகிய அம்மையை இடப் பங்கில் என்றும் கொண்டிருக்கும் அருளாளனையே இனியாவது எங்களுடன் கலந்து பாடுவாயாக.

## விளக்கம்

ஆனந்தமான காலைவேளையில் ஆனந்தமாக இறைவனைப் பாடுவோம் என்று ஒரு தோழி வாய் பேசாதிருந்த ஒருத்தியை நோக்கிக் கூறுகிறாள்.

'அம்மா! கோழி கூவுகிறது; பறவைகள் எல்லாம் ஒலிக்கின்றன. இசைகள் முழங்குகின்றன. சங்குகளும் முழங்குகின்றன. நாங்களும் பரங்கருணைப் பரஞ்சோதியைப் பாடுகிறோம். உனக்கு மட்டும் என்ன உறக்கம்! வாயைத் திறந்து பதில் சொல்லு' என்கிறாள் தோழி.

'அவனது ஒப்பில்லாத சிறந்த செயல்களையும் பாடுகிறோமே, கேட்கவில்லையா? இப்படியும் ஒரு தூக்கமா? வாய் திறந்து பதிலும் சொல்லமுடியாத நிலையில் இருக்கிறாயா?' என்கிறாள்.

'இறைவனோ அன்புக் கடல்; நீயோ அவனிடம் அன்புடையவள் என்று பேர் எடுத்திருக்கிறாய். உறக்கம்தானா அதற்கு அடையாளம்?' என்று கேட்கிறாள்.

ஊழிக் காலத்திலும் ஒரு தனி முதல்வனாய் ஏழை பங்காளனாய் இருக்கும் இறைவனை எங்களுடன் சேர்ந்து பாடி உன் துயிலைப் போக்கிக் கொள்வாய் - என்று கூறி முடிக்கிறாள்.

விசேஷ உரை

பரஞ்சோதி: தலைவனுடைய அழகொளியைக் குறிப்பிடுவதாகும். காலை ஒளி அழகு தலைவனது மேனி ஒளியையும் நினைவூட்டுகிறது; அருள் - அழகையும் நினைவூட்டுகிறது.

ஏழில்: ஏழ் + இல் = ஏழ் இடம். இங்கே ஏழு இசைகளைக் குறிக்கும். இசைவாணர் அதிகாலையில் எழுந்து இசைப் பயிற்சி செய்வது இங்கே குறிக்கப் படுகிறது. இந்த இசை கேட்டு எழுந்து சங்கு ஊதுவோர் சங்குகளையும் ஊதி முழக்குகிறார்களாம்.

பறவைகளில் கோழி முதல் முதல் எழுந்து கூவும். அதனால் தான் 'கோழி கூவப் பொழுது விடியும்' என்கிறார்கள். கோழி எழுப்பப் பறவைகள் எழுந்து பாடுவதுபோல், இசைவாணர் எழுப்பச் சங்கு ஊதுகிறவர்களும் எழுந்து விடுகிறார்களாம். 'அப்படியே நாங்களும் பாடி உன்னை எழுப்பப் பார்க்கிறோம்' என்பது குறிப்பு.

வாழி! ஈது என்ன உறக்கமோ?: 'வாழி'யை அசை நிலையாகக் கொள்வதுடன் வாழ்த்தாகவும் கொள்ளலாம். உறக்கம் பொல்லாது; எனவே இவளை வாழ்த்துகிறாள் தோழி எனலாம். 'வாழி' என்பதை உறக்கத்துடன் தொடர்பு படுத்தி 'அதற்கும் ஒரு வாழ்வு வந்தது போலும்!' என்ற குறிப்பையும் இங்கே காணலாம்.

ஆழியான்: 'கூடல் இழைத்தலால்' என்றும் பொருள் கொள்ளலாம். தலைவனைப் பிரிந்த தலைவி அவன் வரும் குறிப்பை நிலத்தில் சுழித்துச் சுழித்துப் பார்த்துக் குறி பார்ப்பதுபோல் வகைப் செய்து கொள்வதைக் கூடல் இழைத்தல் என்றும், ஆழி இழைத்தல் என்றும் கூறுவதுண்டு. இப்படியெல்லாம் குறி பார்ப்பதற்கு அன்புடைமையே காரணம்.

உள்ளுறை

பொழுது புலர்வதுபோல் அறியாமை யிருள் நீங்கி ஞான ஒளி உதயமாக வேண்டும் என்பதும், இந்த உதயத்திற்கு உறக்கம் நீங்கிய அன்பு இன்றியமையாதது என்பதும், 'அவன் அருளால் அவன் தாள் வணங்கி' இந்த அன்பை அடையவேண்டும் என்பதும் உட்பொருள்.

சேட்டை முதலான சக்திகள் வாமை என்ற ஒன்பதாவது சக்தியை எழுப்புவது இப்பாட்டின் உள்ளுறை என்று கூறுவதும் உண்டு.



## 9

### நல்ல கணவர் வேண்டும் என்று கன்னியர் விண்ணப்பம் செய்து கொள்வது

முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப் பழம்பொருளே!
பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும்அப் பெற்றியனே!
உன்னைப் பிரானாகப் பெற்றஉன் சீரடியோம்
உன்அடியார் தாள்பணிவோம்; ஆங்கவர்க்கே பாங்-
[காவோம்;
அன்னவரே எம்கணவர் ஆவார்; அவர் உகந்து
சொன்ன பரிசே தொழும்பாய்ப் பணிசெய்வோம்;
இன்ன வகையே எமக்குஎம்கோன்! நல்குதியேல்,
என்ன குறையும் இலோம்ஏலோர் எம்பாவாய்.

பதவுரை

[எழுந்த கன்னியர் இறைவனுக்கு விண்ணப்பம் செய்து கொள்கிறார்கள்.]

| | | |
|---|---|---|
| முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம் பொருளே! | - | முற்பட்ட எந்தப் பழைய பொருளுக்கும் முற்பட்ட பழம் பொருளாக இருப்பவனே! |
| பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும் அப் பெற்றியனே! | - | பிற்பட்ட புதுமைப் பொருளுக்கும் அப்படியே பிற்பட்ட புதுமைப் பொருளாக இருப்பவனே! |
| உன்னைப் பிரானாகப் பெற்ற உன் சீர் அடியோம் | - | இத்தகைய உன்னைத் தலைவனாகப் பெற்ற சிறப்பு வாய்ந்த அடியவர்களாகிய நாங்கள் |
| உன் அடியார் தாள் பணிவோம்; | - | உன் அடியவர்களின் அடிகளைப் பணிவோம்; |



C

| | | |
|---|---|---|
| ஆர்க்கு அவர்க்கே பாங்கு ஆவோம்; | - | உனக்கு நண்பர்களாய் இருக்கும் அவர்களுக்கே நாங்களும் நண்பர்களாக இருப்போம் ; |
| அன்னவரே எம்கணவர் ஆவார் ; | - | அத்தகைய அடியவர்களே எங்களுக்குக் கணவர்களும் ஆவார்; |
| அவர் உகந்து சொன்ன பரிசே | - | அவர்கள் விரும்பிச் சொல்லிய தன்மையிலே (நாங்களும் விருப்பம் கொண்டு) |
| தொழும்பாய்ப் பணிசெய்வோம் ; | - | அவர்களது விருப்பத்தையே பணியாக ஏற்றுக் கைங்கரியம் புரிந்து வருவோம் ; |
| இன்ன வகையே எமக்கு எம்கோன் நல்குதியேல், | - | இந்த வகையே எங்களுக்கு எங்கள் அரசனாகிய நீ அருள்புரிவாயானால், |
| என்ன குறையும் இலோம் | - | எத்தகைய குறைபாடும் இல்லாதவர்கள் ஆவோம். |

விளக்கம்

இறைவன் பழமைக்கும் பழமையானவன் ; புதுமைக்கும் புதுமையானவன். 'இத்தகைய இறைவனைக் கோனாக (தலைவனாக)ப் பெற்றிருக்கும் நாங்கள் அடியார்க்கு அடிமை ஆவோம்' என்கிறார்கள். 'அவர்கள் விரும்பிய பணி செய்வோம்' என்கிறார்கள்.

எல்லாவற்றிற்கும் மேலாக 'அவர்களே எம் கணவர்கள்' என்றும் சங்கற்பம் செய்து கொள்ளுகிறார்கள். 'இந்த வரங்களை இறைவன் அளித்து விட்டால் எமக்கும் உண்டோ குறை ?' என்பது இவர்கள் மனநிலை.

நல்ல கணவரைப் பெறவேண்டும் என்ற நோக்கம் பாவை நோன்பு நோற்பவர்களின் முக்கியமான இரு நோக்கங்களில் ஒன்றாகும். நாடு செழிக்க மழை பெய்யவேண்டும் என்பது இரண்டாவது நோக்கம். நாடு செழித்தால்தானே இல்லறத்தை நல்லறமாக்க முடியும் ?

இறைவனைப் பழம் பொருள் என்று சொல்லி விலக்க முடியாது. என்றும் புதுமையாக இருப்பது இந்தப் பழம் பொருளின் ஒரு சிறப்பியல்பு. இந்தப் பாட்டின் முதல் இரண்டு அடிகளில் இந்த விசேஷ உண்மை வலியுறுத்தப் படுகிறது.

சீர் அடியோம் : இறைவனைப் பிரானுகப் பெற்று அடிமை செய்வதே சிறப்பு. 'நாம் ஆர்க்கும் குடியல்லோம்' என்ற வீர சுதந்திர உணர்ச்சி இறைவனுக்கு அடிமையாக இருப்பதிலேயே தோன்றுவதாகும்.

பாங்கு ஆவோம் : பாங்கன் என்ருல் தோழன் ; பாங்கி என்ருல் தோழி. சிவனடியார்களே எங்களுக்குப் பாங்கர், நாங்கள் அவர்களுக்குப் பாங்கியர் என்பது பொருள்.

'எங்களில் ஒவ்வொருவருக்கும் சிவ பக்தர்களில் ஒருத்தரே கணவராக வாய்க்கவேண்டும்' என்பது இவர்கள் இறைவனை நோக்கிச் செய்து கொள்ளும் விண்ணப்பமாகும்.

தொழும்பாய்ப் பணி செய்வோம் : கணவர்மீதுள்ள காதலால் அவர்கள் உகந்த வழியில் பணிபுரிவது இவர்களுக்கு இன்பமயமாகிவிடுகிறது. வாழ்க்கை அன்பு மயமாகிவிட்டால் பணி இன்பமாகிவிடும் என்பது ஒரு பேருண்மையல்லவா ?

காதலர் விருப்பம் வேறு, காதலி விருப்பம் வேறு என்று இருந்தால் இல்லறம் நல்லறமாக மலர்ச்சி பெற முடியாது. 'இரண்டு உடல், ஓர் உயிர்' என்ற நிலையில் இல்லறம் நடத்தும் போது, விருப்ப முரண்பாடோ, செயல் முரண்பாடோ. ஏற்படுவதற்கு வழி ஏது ?

சிவ பக்தரை மணந்து கொண்டு கைங்கரிய வாழ்வு வாழ்வதற்கு இறைவன் அருள்புரிய வேண்டும் என்கிருர்கள். அவன் அருள் இன்றி அணுவும் அசையாது என்று கூறுவதுண்டு : இந்த உண்மையை நன்குணர்ந்து கொண்டிருக்கும் இக் கன்னியர், நல்ல கணவர் வேண்டுமென்று விண்ணப்பம் செய்து கொள்ளும் போதே, அவர் உகந்து சொன்ன பரிசே தொழும்பாய்த் தாங்கள் பணிசெய்யுமாறு தங்கள் உள்ளத்தையும் உடம்

பையும் இறையருள் இயங்கச் செய்ய வேண்டுமென்றும் விண்ணப்பித்துக் கொள்கிறார்கள். இந்த விண்ணப்பம் நிறைவேறி விட்டால் தங்களுக்குக் குறையே இல்லாமற் போய்விடும் என்கிறார்கள்.

உள்ளுறை

இறைவனுக்கும் அடியார்களுக்கும் பணிபுரிவதையே இன்பமாகக் கருதவேண்டும். இந்தக் கைங்கரியமே உறவு என்பது இப்பாட்டின் திரண்ட உட்பொருள்.

ஒன்பது சக்திகளும் ஒன்று கூடித் தங்கள் சங்கற்பத்தை இறைவனை நோக்கி விண்ணப்பித்துக் கொள்வது உள்ளுறை என்று கருதுவோரும் உண்டு.



## 10

### ஊர் பேர் முதலியன வினவுதல்

பாதாளம் ஏழினுங்கீழ் சொற்கழிவு பாதமலர் ;
போதார் புனைமுடியும் எல்லாப் பொருள்முடிவே !
பேதை ஒருபால் திருமேனி ஒன்றல்லன் ;
வேதமுதல் விண்ணோரும் மண்ணும் துதித்தாலும்,
ஓத உலவா ஒருதோழம்; தொண்டர் உளன் ; [காள்!
கோதில் குலத்(து)அரன்-தன் கோயிற்பிணாப் பிள்ளை-
ஏதவன்ஊர் ? ஏதவன்பேர் ? ஆர்உற்றார் ? ஆர்அய-
ஏதவனைப் பாடும் பரிசு ? 'ஏலோர் எம்பாவாய். [லார்?

பதவுரை

| | | |
|---|---|---|
| கோதில் குலத்து | - | குற்றமற்ற கூட்டத்தினரும் |
| அரன் தன் கோயில் பிணாப் பிள்ளைகாள் ! | - | சிவபெருமான் திருக்கோயிலில் பணி புரிவோரும் ஆன பெண் பிள்ளைகளே ! |
| பாதாளம் ஏழினும்கீழ் சொற்கழிவு பாதமலர் ; | - | கீழ் உலகங்கள் ஏழினுக்கும் கீழ்ப் பட்டன (இறைவனது) சொல்லுக்கு அடங்காத நிலையிலுள்ள பாத மலர்கள் ; |
| போது ஆர் புனைமுடியும் எல்லாப் பொருள் முடிவே ; | - | பூக்களை அணிந்த திருமுடியும் எல்லாப் பொருள்களும் முடிந்து நிற்கும் முடிவாக உள்ளது ; |
| பேதை ஒருபால் திருமேனி ஒன்று அல்லன் ; | - | உமா தேவியை ஒரு பக்கத்திலே கொண்ட திருமேனி ஒன்று தான் உடையவன் என்பது இல்லை ; |
| வேதமுதல் விண்ணோரும் மண்ணும் துதித்தாலும், | - | வேதத்தை முதலாகக் கொண்டு விண்ணுலகத்தவரும் மண்ணுலகத்தவரும் துதித்தாலும், |

ஓத உலவா ஒரு தோழம்; - அப்படித் துதித்து ஓதுகிற அந்தப் புகழையும் கடந்து நிற்கும் ஒரு பேரெண் அந்தத் திருமேனியின் கணக்கு;

தொண்டர் உளன்; - எனினும் தொண்டர்களின் உள்ளத்தில் உள்ளவன்;

ஏது அவன் ஊர்? ஏது அவன் பேர்? ஆர் உற்றார்? ஆர் அயலார்? அவன் ஊர் எது? பேர் எது? உறவினர் யார்? அயலார் யார்?

ஏது அவனைப் பாடும் பரிசு? - அவனைப் பாடும் தன்மைதான் யாது?—என்று சொல்லுங்கள்.

## விளக்கம்

திருக்கோயிலில் பணி செய்வதற்கு உரிமை பூண்ட பெண்கள் கூட்டத்தை நோக்கி, இறைவன் ஊர் பேர் முதலியன வினவுகிறார்கள் மார்கழி நீராடப் போகும் கன்னியர்.

'இறைவனுடைய திருவடிகளோ சொல்லின் தொடர்பைக் கடந்து கீழ் ஏழு லோகத்திற்கும் கீழாகச் செல்லுகிறது; திருமுடியோ எல்லாப் பொருள் முடிவாகவும் உள்ளது. அர்த்த நாரீச்வரத் திருமேனி (உமை ஒரு பாகம் கொண்ட மேனி) ஒன்று தான் இறைவனுக்கு உரியது என்பதில்லை. வேதத்தை முதலாகக் கொண்டு விண்ணும் மண்ணும் துதித்தாலும் அங்ஙனம் துதித்து ஓதுகிற அந்தப் புகழ்ச்சியையும் கடந்து நிற்பது இறைவன் திருமேனியின் எண்ணிக்கை எனலாம். எனினும் அந்த இறைவன் தொண்டர்களின் உள்ளத்தில் கோயில் கொண்டிருக்கிறான்.' என்றெல்லாம் கன்னியர்கள் கோயிற்பணி புரியும் பெண்களை நோக்கிச் சொல்லுகிறார்கள்.

பிறகு 'இத்தகைய இறைவனுக்கு ஊர் உண்டா? பேர் உண்டா? உற்றார் என்றும், அயலார் என்றும் சிலர் இருக்க முடியுமா? அவனைப் பாடும் தன்மைதான் யாது?' என்றெல்லாம் கேள்விகளை அடுக்குகிறார்கள்.

முதல் இரண்டு அடிகளில், உலகங்கள் யாவுமாகத் திருவடியும் திருமுடியும் பெருகி இப்பாலும் அப்பாலுமாக இருக்கும் இறை இயல்பு கூறப்படுகிறது. 'திருவடியாய் விரிந்தும் திருமுடியாய் நுணுகியும்' சொற்கழிவாகவும் பொருள் முடிவாகவும் நிற்கிறான் இறைவன் என்று கூறுவது, நம்மை எங்கேயோ பனி மூடிய ஒரு மலைச் சிகரத்திற்கு அழைத்துக் கொண்டு போவது போலத் தோன்றுகிறது.

எனினும் 'பாத மலர்' என்றும் 'போது ஆர் புனை முடி' (ஆத்திமாலை சூடிய திருமுடி) என்றும் கூறியிருப்பது மனத்திற்கும் எட்டாத தத்துவத்தை மனோபாவக் கண் கொண்டு கலையாகக் காணும் முயற்சியாகும். சமய நெறி நிற்கும் அறிஞர்களுக்கு இந்த உண்மை இனிது புலனாகும்.

இந்த இறைவன் அர்மை அப்பனாகக் காட்சி தருகிறான். எனினும் இந்தத் திருமேனி ஒன்றுதானா இவனுக்கு உரியது? கணித அறிஞரும் திட்டமாகத் தெரிந்து கொள்ளாத ஒரு பேரெண் (தோழம்) என்று சொல்லும்படி அத்தனை திருமேனிகள் இறைவனுக்கு உண்டு என்கிறார்கள். ஓத ஓதப் புகழப் புகழப் பயிலப் பயிலக் கெடாத (உலவாத) தொகையை 'ஒரு தோழம்' என்று குறிப்பிடுகிறார்கள். எனினும் தொண்டர் உள்ளத்திற்குள்ளே கோயில் கொண்டிருக்கிறான் என்றும் சொல்லுகிறார்கள்.

கடவுள் ஒருவன் என்று சாதாரணமாகச் சொல்லுகிறோம். இங்கே மணிவாசகப் பெருமான் இக்கன்னியர் வாயிலாக, 'இறைவன் ஏகன் அல்லன்; அநேகனும் ஆவான்' என்ற பேருண்மையையும் உணர்த்துகிறார்.

எட்டி எட்டிப் பார்த்தாலும் அறிவுக்கு எட்டாத பெருவடிவு அன்பர் உள்ளத்திற்குள் கோயில் கொண்டிருக்கிற உண்மையையும் இங்கே வற்புறுத்தப் படுகிறது. அறிவாராய்ச்சிக்கு அகப்படாதவன் அன்பில் அகப்படுவான் என்பது பக்தித் துணிவு

ஞாலமெல்லாம் கடந்து நிற்பவன், மூலமும் முடிவுமாக இருப்ப வன், நமது கைகால்களைக் காட்டிலும், மூச்சுக் காற்றைக் காட்டி லும் நெருங்கிய தொடர்பு உடையவனாய் உள்ளத்தில் இருக் கிறான் என்பதும் ஒரு மகத்தான உண்மை.

உள்ளத்திலிருந்தும் பிறர் அறிந்து கொள்வதில்லை: தொண் டர்களே அவன் அருளால் அகக் கண் கொண்டு காண்கிறார்கள். 'கள்ளம் போனால் உள்ளது காணும்' என்ற முறையில் அன் பால் தூய்மை பெறும் உள்ளம் கடவுளுண்மை காண்கிறது. எனவே 'தொண்டர் உளன்' என்பது கன்னியர் வாக்கு.

உள்ளுறை

இறைவன் எங்குமாகி உள்ளத்தவனுமாகி அன்பிற்கு எளியவனுமாகி நிற்கும் நிலையுடன், அவன் எல்லாவற்றையும் கடந்து நிற்கும் நிலையும் வற்புறுத்தப் படுகிறது. 'ஒருவன் அல்லன், ஓர் ஊரன் அல்லன்' என்ற அப்பர் சுவாமிகளின் அருள் வாக்கையும் இப்பாட்டு நினைவூட்டுகிறது.

கோயிற் பிணாப்பிள்ளைகளை உருத்திர கணிகையர் என்று கூறுவோரும் உண்டு.



## 11

### தாமரைக் குளத்தில் கன்னியர் நீராடுதல்

மொய்யார் தடம்பொய்கை புக்கு, முகேரென்னக்
கையால் குடைந்து குடைந்(து), உன் கழல்பாடி,
[போல்
ஐயா ! வழிஅடியோம் வாழ்ந்தோம்காண் ; ஆரழல்-
செய்யா ! வெண் ணீறடீ ! செல்வா ! சிறுமருங்குல்
மையார் தடங்கண் மடந்தை மணவாளா !
ஐயா ! நீ ஆட்கொண் டருளும் விளையாட்டின்,
உய்வார்கள் உய்யும் வகையெல்லாம் உய்ந்தொழிந்-
[தோம் ;
எய்யாமல் காப்பாய் எமைஏலோர் எம்பாவாய்.

பதவுரை

[திருக்கோயிலில் பணிபுரியும் முதியவர்களான பெண்களுடன் உரையாடிய பின், கன்னியர் இறைவனை நோக்கி,]

| | | |
|---|---|---|
| ஐயா ! | - | தலைவனே ! |
| ஆரழல் போல் செய்யா ! | - | நிறைந்த அழல் போன்ற செந்நிறத் திருமேனியனே ! |
| வெண்ணீறு ஆடீ ! | - | திருநீறு பூசியவனே ! |
| செல்வா ! | - | எங்கள் செல்வமாகிய சிவபுரத்து அரசே ! |
| சிறுமருங்குல் மை ஆர் தடங்கண் மடந்தை மணவாளா ! ஐயா ! | - | சிறிய இடையையும் மையுண்ட பெரிய கண்களையும் உடைய உமை அம்மையின் மணவாளனே ! ஐயனே ! |

மொய் ஆர் தடம் பொய்கை புக்கு, - பூக்கள் நெருங்கி நிறைந்து அகன்ற நீர்நிலையில் புகுந்து,

முகேர் என்னக் கையால் குடைந்து குடைந்து, - கையால் 'முகேர்' என்னும் ஒலி எழும்பும்படி முழுகி முழுகி

உன்கழல் பாடி, - உன் திருவடிகளைப் பாடி,

வழி அடியோம் வாழ்ந்தோம் காண்; - வழி வழியாக உனக்கு அடிமை செய்து வரும் மரபில் தோன்றிய நாங்கள் வாழ்வை அடைந்தோம்;

நீ ஆட்கொண்டருளும் விளையாட்டின், - இப்படி எங்களை ஆட்கொண்டு வரும் உன் திருவிளையாட்டிலே,

உய்வார்கள் உய்யும் வகை எல்லாம்- உய்ந்து போகும் அன்பர்கள் உறுதிப் பயன் அடையும் வகைகள் எல்லாம்

உய்ந்தொழிந்தோம்: - நாங்களும் பெற்று ஈடேறி விட்டோம்:

எய்யாமல் காப்பாய் எமை. - எங்களை இனி எய்த்துப் போகாமல் காத்து வருவாயாக.

விளக்கம்

மொய் ஆர்: 'வண்டுகள் மொய்க்கின்ற' என்றும் பொருள் கொள்ளலாம். மொய்—வண்டு.

பொய்கை: இயற்கையாகத் தோன்றிய நீர்நிலை; மனிதரால் ஆக்கப் பெறாதது.

முகேர்: கையால் நீரைக் குடையும்போது எற்படும் ஒலிக் குறிப்பு.

நெருப்புப் போன்ற திருமேனியில் தூய வெண்ணீறு பூசியிருப்பது சிந்தனைக்கு உரியது. நீறு பூத்த நெருப்பை நினைவூட்டு

கிறது இறைவன் இருப்பு. நீற்றுக்குள் நெருப்பு இருப்பதை அறியாதவர்கள் கடவுளுண்மையை அறியாதார் என்பது குறிப்பு.

செல்வா !: அன்பர்களுக்குச் செல்வம் ஆண்டவன் தான். 'செல்வன் கழல் ஏத்தும் செல்வம் செல்வமே' என்பது திருஞான சம்பந்தர் திருவாக்கு.

இறைவன் திருவடிகளைப் பாடிக்கொண்டே மார்கழி நீராடி வாழ்வு பெறுகிறார்களாம். இந்த வாழ்விலே சிவனடியாரைக் கணவராகப் பெறும் பேறு கிடைக்கிறது. எல்லாம் இறைவன் திருவிளையாட்டு என்கிறார்கள்.

'நீ விளையாடி வரும் இந்த விளையாட்டால் உன் அன்பர்கள் உய்ந்தபடியெல்லாம் நாங்களும் பேறுபெற்று உய்ந்தோம்' என்கிறார்கள். முன்பும் வருந்தாது பேறு பெற்றார்களாம். மேலும் அப்படியே பாக்கியம் பெறும்படி இறைவன் காப்பாற்ற வேண்டும் என்பது இந்தக் கன்னியர் விண்ணப்பம்.

விசேஷ உரை

இறைவனது இந்த விளையாட்டு அழகாக அன்பரை ஆட்கொள்ளும் காதல் - திருவிளையாட்டு. இந்த விளையாட்டால் அன்பர்கள் உறுதிப்பயன் பெறுகிறார்கள். பிறரோ செக்கு மாடு போல் சுற்றிச் சுற்றி வருகிறார்கள், உய்தி பெறுமலே, வாழ்க்கை எய்த்துப் போகிறது பக்தி இல்லாதவர்களுக்கு.

நீறு பூத்த நெருப்பைப் போலிருக்கும் இறைவனைத் தலைவன் என்று உணர்ந்து கொள்ளும் அன்பர்களுக்கு அவன் அம்மை அப்பனாக இருந்து அவர்களை அன்பர் ஆக்கிக் கொள்கிறான் என்பது குறிப்பு. 'அன்பர்' என்றால் ஆண்டவன் இடத்திலும் அவனுடைய அன்பர்களிடத்திலும் அன்பு பூண்டு வாழ்வோர் என்று பொருள்.

இந்த அன்பு பெருகுவதும் அவனது அற்புதக் காதல் - திருவிளையாட்டினாலே என்பது கருத்து.

உள்ளுறை

இறைவனுக்கு உரு மேனியும் உண்டு; அரு மேனியும் உண்டு. அரு உரு என்ற இருமேனியும் உண்டு என்பர். இந்த இருமேனியும் கருணையின் வடிவு. இந்தக் கருணையினல் நடைபெறுவது அவனது அன்புத் திருவிளையாட்டு.



## 12

### சிவ சிந்தனையோடு நீராடுதல்

ஆர்த்த பிறவித் துயர்கெட, நாம் ஆர்த்தாடும்
தீர்த்தன், நற் றில்லைச்சிற் றம்பலத்தே தீயாடும்
கூத்தன், இவ் வானும் குவலயமும் எல்லோமும்
காத்தும் படைத்தும் கரந்தும் விளையாடி,
வார்த்தையும் பேசி, வளைசிலம்ப, வார்கலைகள்
ஆர்ப்பரவஞ் செய்ய, அணிகுழல்மேல் வண்டார்ப்ப,
பூத்திகழும் பொய்கை குடைந்(து)உடையான் பொற்-
[பாதம்
ஏத்தி, இருஞ்சுனைநீ ரா(டு)ஏலோர் எம்பாவாய்.

பதவுரை

[*கன்னியர் கூட்டம் இறைவனைப் புகழ்ந்து திருவடி ஏத்தித் சுனைநீர் ஆடுகிறார்கள். அப்போது நீராடுகின்ற ஒருத்தி மற்றொருத்தியைப் பார்த்து,*]

*ஆர்த்த பிறவித் துயர்கெட,* - *நம்மைக் கட்டிப் பிணித்திருக்கும் பிறவித்துன்பம் கெட்டொழிய,*

*நாம் ஆர்த்து ஆடும் தீர்த்தன் ;* - *நாம் மகிழ்ச்சி - ஆரவாரம் செய்து முழுகும் இந்தத் தூய நீர்போன்ற இறைவனும்,*

*நல் தில்லைச் சிற்றம்பலத்தே தீயாடும் கூத்தன்,* - *நல்ல தில்லையிலுள்ள சிற்றம்பலம் என்ற ஞான அம்பலத்தில் தீயைக் கையில் ஏந்தி ஆடுகின்ற ஆனந்தக்கூத்தனும்,*

| | | |
|---|---|---|
| இவ்வானும் குவலயமும் எல்லோமும் காத்தும் படைத்தும் கரந்தும் விளையாடி, | - | இக்குவலயமும் (நில உலகமும்) அந்த வானுலகமும் உயிர்க் கூட்டமாகிய எல்லோமும் படைத்தும் காத்தும் ஒடுக்கியும் விளையாடுகிறவனும் ஆகிய இறைவனுடைய, |
| வார்த்தையும் பேசி, | - | செய்தியைப் பேசி, |
| வளை சிலம்ப, | - | வளையல்கள் ஒலிக்க, |
| வார்கலைகள் ஆர்ப்பு - அரவம் செய்ய, | - | நீண்ட மேகலைகள் ஆரவாரஞ் செய்ய, |
| அணிகுழல் மேல் வண்டு ஆர்ப்ப, | - | அழகிய கூந்தல்மீது வண்டுகள் ஆரவாரிக்க, |
| பூத்திகழும் பொய்கை குடைந்து, | - | பூம்பொய்கையிலே முழுகி |
| உடையான் பொற்பாதம் எத்தி, | - | நம்மை அடிமையாக உடைய இறைவனுடைய அழகிய திருவடியை வணங்கி, |
| இருஞ்சுனை நீராடு | - | சுனையிலுள்ள கரிய நீரிலே ஆடுவோமாக |

[என்கிருள்.]

## விளக்கம்

அம்மா! ஆனந்தக் கூத்தனது ஐந்தொழில் - ஆற்றலின் அருமைப் பாட்டைப் பாடிக் கொண்டு வளைகள் கலகலென, மேகலைகள் சலசலென, கூந்தல் மீது வண்டுகள் ரீங்காரம் செய்ய ஆனந்தமாக நீராடுவோம் என்கிருள் கன்னியர் கூட்டத்தில் ஒருத்தி மற்ருெருத்தியை நோக்கி.

நம்மைப் பிடித்துப் பீடிப்பது பிறவித் துயர். அது கெடுவதற்காக இறைவனது அருட் புகழ் குறித்து உரையாடிக் கொண்டு மகிழ்ச்சியுடன் நீராடுவோம் என்கிருள்.

இறைவனைத் தீர்த்தன் என்றும், கூத்தன் என்றும், 'விளை யாடி' (விளையாடுபவன்) என்றும் குறிப்பிடுகிறாள். இந்தப் பெருமானுடைய வார்த்தையைப் பேசிக் கொண்டே நீராடு வோம் என்கிறாள்.

நீராடும் இன்பத்திற்கும் குறைவில்லை; இறைவன் வார்த்தை பேசும் ஆனந்தத்திற்கும் குறைவில்லை. பெண்களின் மகிழ்ச்சி - ஆரவாரத்திற்கும் குறைவில்லை; நெஞ்சில் அமைதி யான பக்திக்கும் குறைவில்லை.

விசேஷ உரை

இக் கன்னியர் தீர்த்தமாடும் தீர்த்தம்போல் தூய்மை செய் வதுடன் அன்பர்களுக்கு மகிழ்ச்சியும் தருகிறான் இறைவன். அவனது குளிர்ந்த நல்லருளுக்குக் குளிர்ந்த சுனைநீரை இப் போது அறிகுறியாக்குவது எவ்வளவு பொருத்தமானது!

'தீர்த்தன்' என்று சொன்ன வாயால் 'தீயாடும் கூத்தன்' என்றும் சொல்லுகிறார்கள். முரண்பாடுகளெல்லாம் சமரச மாகக் கலக்கும் நீர்மையுள்ளவன் என்பது குறிப்பு.

தில்லைச் சிற்றம்பலம் ஞான வெளியின் அறிகுறி. இங்கே தீயை இடது கையில் ஏத்தித் தீவடிவமாக நின்று ஆடிக்கொண் டிருக்கும் கூத்தனின் அருளை இவர்கள் மகிழ்ந்து ஆடும் தீர்த்தத்தை நினைவூட்டுகிறது.

சுனைநீராடுதல் இறைவனுடைய குணக்கடலில் உள்ளம் மூழ்கப் பெறுவதற்கு ஓர் அறிகுறி. அன்பர்களை ஆனந்தக் கடலுள் மூழ்கச் செய்வதற்கு ஆனந்தக் கூத்தாடுகிறானும் தில்லைச் சிற்றம்பலத்திலே.

இந்த ஆனந்த நாடகம், எல்லாவற்றையும் காத்துப் படைத் துக் கரந்து விளையாடும் லீலைக்கும் அறிகுறி. இந்தப் பாட்டில் பொய்கையில் நீராடுவதும் சுனையில் நீராடுவதும் வேறாகக் குறிக் கப் பெற்றுள்ளன. பொய்கையில் நாள்தோறும் நீராடுவார் கள். விசேஷ தினங்களில் பொய்கையில் நீராடியபின் சுனைநீரி லும் ஆடுவதுண்டு.

'விளையாடி'யின் வார்த்தை என்பதில் விசேஷமான குறிப்புப் பொருள் ஐந்தொழில் ஆற்றல். காத்தும் படைத்தும் கரந்தும் பிறவித் துயர் நீக்கியும் வருவதை ஒரு விளையாட்டாகச் செய்கிறுன் இறைவன்.



# 13

அம்மை யப்பனை நினைவூட்டும் நீரில்
அலைமோத ஆடுவோம்

பைங்குவளைக் கார்மலரால், செங்கமலப் பைம்போ-
அங்கம் குருகினத்தால், பின்னும் அரவத்தால், [தால்,
தங்கண் மலங்கழுவு வார்வந்து சார்தலினல்,
எங்கள் பிராட்டியும் எங்கோனும் போன்(று)-
பொங்கு மடுவில் புகப்பாய்ந்து பாய்ந்து, நம் [இசைந்த
சங்கம் சிலம்பச் சிலம்பு கலந்தார்ப்பக்
கொங்கைகள் பொங்கக் குடையும் புனல்பொங்கப்
பங்கயப் பூம்புனல்பாய்ந்(து) ஆடேலோர்
[எம்பாவாய்.

பதவுரை

| | | |
|---|---|---|
| பைங்குவளைக் கார்மலரால், | - | குளிர்ந்த கரிய குவளை மலராலும், |
| செங்கமலப் பைம்போதால், | - | செந்தாமரையின் அழகிய மலராலும், |
| அங்கம் குருகினத்தால், | - | தன்னிடத்தே உள்ள பறவைக் கூட்டங்களாலும், (இதற்கு வேறொரு பொருள்: அங்கமாகிய கையில் வளைகள் பல அடுக்கிக்கொண்டிருப்பதாலும். 'குருகு' என்றால் குருக்கத்தி என்றும் பொருள்.) |
| பின்னும் அரவத்தால் | - | பின்னித் தொடர்ந்து எழுகின்ற சப்தத்தாலும், (வேறொரு பொருள்: பின்னிக் கிடக்கும் பாம்புகளாலும்.) |



D

| | |
|---|---|
| தங்கண் மலங்கழுவுவார் வந்து சார் தலினால், - | தம்மிடத்துள்ள அழுக்கைக் கழுவுவோர் வந்து அடைத லாலும், |
| எங்கள் பிராட்டியும் எம்கோனும் போன்று இசைந்த - | எங்கள் அம்மையையும் எம் தலை வனையும் ஒத்து இசைந்திருக் கும் |
| பொங்கும் மடுவில் புகப்பாய்ந்து பாய்ந்து - | நீர் பொங்கும் பொய்கையில் பாய்ந்து பாய்ந்து புகுதலால் |
| நம் சங்கம் சிலம்ப - | நமது வளைகள் ஒலிக்கவும், |
| சிலம்பு கலந்து ஆர்ப்ப - | பாதச் சிலம்புகளும் கை வளைக ளின் ஒலிகளோடு கலந்து ஒலிக்கவும் |
| கொங்கைகள் பொங்க - | கொங்கைகள் பூரிக்க |
| குடையும் புனல் பொங்க - | முழுகும் நீர் பொங்கி எழவும், |
| பங்கயப் பூம்புனல் பாய்ந்(து) ஆடு- | தாமரைப் பொய்கையின் அழ கிய நீரில் பாய்ந்து நீராடுவோ மாக. |

### விளக்கம்

இறைவனுக்கும் இறைவிக்கும் பொய்கைக்கும் சிலேடை யாக அமைந்திருக்கும் வாக்கின் பொருளையும் பயனையும் கருத் தூன்றிக் கவனிக்க வேண்டும்.

பைங்குவளை, செந்தாமரை, குருகினம், அரவம், இவைகளை இறைவனிடத்திலும் காணலாம்; இறைவியிடத்திலும் காண லாம்; இந்தப் பொய்கையிலும் காணலாம்.

இறைவிக்குக் கருங்குவளை மலர்களை ஒத்த கண்கள் உண்டு. கருங்குவளை போன்ற நீலகண்டத்தை உடையவன் இறைவன். குளிர்ந்த கருங்குவளை மலர்கள் பொய்கையை ஒட்டிப் பூத்திருப் பதையும் காண்கிறோம்.

செந்தாமரைப் பூக்கள் இறைவனது செந்நிறத்தை நினை வூட்டுகின்றன; இறைவியின் வாய், கை, திருவடி ஆகிய அங் கங்களின் செந்நிறத்தையும் நினைவூட்டுகின்றன. இம்மலர்களை இத் தாமரைத் தடாகத்திலும் காண்கிறோம்.

அங்கம் குருகு இனத்தால்: அங்கத்திலே அடையாளமாகக் குருக்கத்திமாலே அணிந்திருப்பவன் இறைவன். வளைகள் அணிந் திருப்பவள் இறைவி. பறவைக் கூட்டங்களை உடையது பொய்கை. குருகு இனம்—(1) குருக்கத்தி மலர்மாலே, (2) வளை கள், (3) பறவைக் கூட்டம்.

பின்னும் அரவத்தால்: பின்னி எழும் சப்தங்களையுடையது பொய்கை; பின்னிக் கொண்டிருக்கும் பாம்புகளை அணிந்து கொண்டிருப்பவன் இறைவன்; பின்னிய கூந்தல் என்ற அர வத்தை—அதாவது அரவம் போலத் தொங்கும் கூந்தல்-பின்னலே உடையவள் பிராட்டி. அரவம் (1) ஒலி, (2) பாம்பு.

தங்கண் மலங்கழுவுவார் வந்து சார்தலினல்: உயிரின் அழுக்கைக் கழுவுவோர் உமாதேவியின் அருளுக்கு இலக்காக வேண்டும்; சிவபெருமானையும் வந்தடைய வேண்டும். உடம் பின் அழுக்கைக் கழுவுவோர் பொய்கையில் வந்து நீராடுவர்.

சிவபெருமானையும் உமாதேவியையும் ஒத்துத் தோன்றுகிற நீர்நிலேயில் வளைகளும் பாதச் சிலம்புகளும் கலந்து மயங்கி ஒலிக்கவும், உள்ளக் கிளர்ச்சியால் மார்பு பூரிக்கவும், பூம்புனல் பொங்கப் பாய்ந்து நீராடுவோம் என்பது திரண்ட பொருள்.

### விசேஷ உரை

குவளை மலர் இறைவியின் கண்களை நினைவூட்டுவதுடன் நீல மேனியையும் ஞாபகப் படுத்துகிறது.

'மலம்' உயிரின் அழுக்கைக் குறிக்கும்போது 'ஆணவ மலம்' என்று சொல்லப் படுகிறது. அம்மையப்பனை அடைந்து ஆணவ மலம் போக்கிக் கொள்கிறார்கள்,—குளத்திலே குளித்து உடம்பின் அழுக்கைப் போக்கிக்கொள்வது போல.

போது: பெரிய அரும்பு. குருகு—நீர்வாழ் பறவை. 'குருகு இனம்'—குருக்கத்தி மாலேயைக் குறிக்கும்போது குருக்கத்தி இனமாகிய பூமாலே என்று பொருள் கொள்ள வேண் டும்.

உள்ளுறை

இறைவனுக்கு உள்ளன எல்லாம் இறைவிக்கு உண்டு; இறைவிக்கு உள்ளன இறைவனுக்கும் உண்டு. இத்தகைய அம்மையப்பர்களின் அருட் புனலில் தோய்வதை நினைவூட்டுகிறது பூம்புனலில் தோய்ந்து நீராடுவது.

'மின்னும் அரவம்' என்பதற்கு உட்பொருள் எல்லா ஒலிகளும் கலந்த ஓங்கார நாதம் என்பர்.



## 14

### குளிருக்கு மருந்து

காதார் குழையாடப், பைம்பூண் கலனாடக்,
கோதை குழலாட, வண்டின் குழாமாடச்,
சீதப் புனலாடிச், சிற்றம் பலம்பாடி
வேதப் பொருள்பாடி, அப்பொருளா மாபாடிச்,
சோதி திறம்பாடிச், சூழ்கொன்றைத் தார்பாடி,
ஆதி திறம்பாடி, அந்தமா மாபாடிப்
பேதித்து நம்மை வளர்த்தெடுத்த பெய்வளைதன்
பாதத் திறம்பாடி ஆ(டு)எலோர் எம்பாவாய்.

### பதவுரை

[கன்னியர் கூட்டத்தில் ஒருத்தி வேறொருத்தியை நோக்கிச் சொல்கிறாள்.]

| | | |
|---|---|---|
| காது ஆர் குழை ஆட, | - | காதில் அணிந்த தோடு ஆடவும், |
| பைம் பூண் கலன் ஆட, | - | அழகிய பசும்பொன் ஆபரணங்கள் ஆடவும், |
| கோதை குழல் ஆட, | - | மாலையும் கூந்தலும் ஆடவும், |
| வண்டின் குழாம் ஆட | - | மாலையைச் சூழ்ந்து வண்டுக் கூட்டங்கள் ஆடவும், |
| சீதப் புனல் ஆடி, | - | குளிர்ந்த நீரில் ஆடி, |
| சிற்றம்பலம் பாடி, | - | தில்லைத் திருச்சிற்றம்பலத்தைப் பாடி, |
| வேதப் பொருள் பாடி, | - | வேதத்தின் உட்பொருளையும் பாடி, |
| அப்பொருள் ஆமா பாடி, | - | இறைவன் அப்பொருள் ஆகும் விதத்தையும் பாடி |
| சோதி திறம்பாடி, | - | ஜோதியாய் நிற்கும் திறத்தையும் பாடி, |

சூழ் கொன்றைத் தார்பாடி, - அவன் சிறப்பாக அணிந்து கொண்டிருக்கும் கொன்றை மாலையையும் பாடி,

ஆதி திறம் பாடி, - முதல்வனாகிய அவனுடைய ஆற்றலையும் பாடி,

அந்தம் ஆமா பாடி, - அவன் எல்லாவற்றுக்கும் அந்தமாக நிற்கும் நிலையையும் பாடி

பேதித்து நம்மை - நம்மை ஆணவ மலம் முதலான மலங்களிலிருந்து வேறு படுத்தி

வளர்த்து எடுத்த பெய்வளைதன் - மேம்படுமாறு வளர்த்தவளும், வளையல் பெய்த (அணிந்த) அன்னையுமாகிய உமாதேவியின்

பாதத் திறம்பாடி ஆடு. - திருவடி இயல்பையும் பாடி நீராடுவாய்.

[இப்படி வெளிப்படையாகச் சொல்லி, 'நாங்களும் உன்னுடன் நீராடுவோம்' என்று குறிப்பாகச் சொல்லுகிறாள்.]

## விளக்கம்

நீராடும்போது தன் அருமைத் தோழியின் காதணிகளும் மற்றை ஆபரணங்களும் அசைந்தாடும் என்றும், அவளுடைய நீளமான கூந்தல் அவிழ்ந்தாடும் என்றும், வண்டுகள் கூட்டமாக எழுந்தாடும் என்றும் விளையாட்டாக வருணிக்கத் தொடங்குகிறாள்.

இப்படி வருணித்துக் கொண்டிருக்கும் போதே, இந்த ஆட்டங்களிலிருந்து பேசிக் கொண்டிருப்பவளின் உள்ளம் வேறொரு ஆட்டத்திற்கு—அதாவது பிரபஞ்ச ரகசியமான தனிப்பெருங் கூத்திற்கு,—பாய்ந்து செல்லுகிறது.

உடனே, 'இறைவன் ஆடிக் கொண்டிருக்கும் சிதம்பரத்தைப் பாடிக் கொண்டே சீதப் புனலில் இறங்கிவிடு; குளிர் தெரியாது!' என்று சாதுரியமாகக் குறிப்பிடுகிறாள்.

சீதப் புனல்ஆடிச் சிற்றம் பலம்பாடி

என்று எப்படி இசைந்து வருகிறது பாருங்கள்!

பிறகு அந்த ஆனந்த நாடகத்தின் தத்துவப் பொருளாகிய வேதப் பொருளின் அருமை பெருமைகளைப் பாடச் சொல்லுகிறாள். அந்தத் தத்துவத்தை மறுபடியும் கலைக் கண்ணுடன் காணவிரும்பி, 'ஜோதியாகிய நடராஜாவையும் அவனுடைய அடையாள மாலையையும் ஆசைதீரப் பாடு' என்கிறாள்.

ஆதியாகவும் அந்தமாகவும் உள்ள அவனது நிலையைப் பாடிவிட்டுக் கடைசியாக அவனது அருள் வடிவமான உமா தேவியைப் பாடிக் கொண்டே நீராடச் சொல்லுகிறாள்.

தேவியைக் குறிப்பிடும்போது, எல்லாருக்கும் தாய்தான்; என்றாலும் நம்மை விசேஷமாக ஆட்கொண்டு பக்தியோடும் புத்தியோடும் வளரச் செய்தவள் என்பதை உருக்கமாகச் சொல்லுகிறாள்.

## விசேஷ உரை

'அப்பனான இறைவனையும் தாய்க்குலத்தின் பிரதிநிதியான இறைவியையும் இப்படிப் பாடிக் கொண்டே நீராடினால், குளிர் மட்டுமா போகும்? சம்சாரத்தில் உள்ள நடுக்கங்களும் போய் விடும்' என்பது குறிப்பு.

முந்திய பாட்டில் நீராடும் விதத்திலும் குதூகலம் புலப்பட வேண்டும் என்று குறிப்பிட்டது போல், இந்தப் பாட்டின் முற் பகுதியிலும் அப்படியே குறிப்பிடுகிறாள்.

இந்தப் பாட்டின் பொருளழகும் இசையழகும் பாடப் பாடப் புலனாகும். இத்தகைய பாடல்களைப் பாடும்போது நமது உள்ளமும் உணர்வும் குளிர்ந்து ஆனந்தமான பண் - இன்பத் திலும் பக்திப் பேரின்பத்திலும் மூங்கி மூங்கி எழுகின்றன.

பெண்கள் பாய்ந்து நீராடும்போது அந்தப் பொய்கை எப் படிப் பொங்கியதோ, அப்படிப் பொங்கி வருகின்றன சொல் லும் பொருளும், மனோபாவமும் ஓசையின்பமும்: இவை

ஒன்றுக்கொன்று உச்சமாக அலைமேல் அலையெறிந்து வருவதைக் காண்கிறோம்.

உள்ளுறை

இறைவனைப் பாடுவது உள்ளக் குளிராகிய நடுக்கம் கவலை ஆகியவற்றுக்கெல்லாம் அருமருந்து.

சிற்றம்பலம் ஆகிய ஞானவெளியிலிருந்து வேதம் தோன்றுகிறது. அதிலிருந்து வேதப் பொருளாகிய மெய்யுணர்வு வெளிப்படுகிறது. அந்த மெய்யுணர்வில் ஜோதியாகத் தோன்றுகிறான் இறைவன். 'சூதிலாத சிற்றம்பலத்துச் சோதி' என்று இந்த ஜோதியைக் குறிப்பிடுகிறார்கள்.

கொன்றை மாலை இந்த ஜோதியின் வெற்றி மாலைக்கு அறிகுறி. அறியாமை இருளையும் ஆணவ மல இருளையும் அழிப்பது ஜோதிக்கு வெற்றி.



## 15

### இவ்வண்ணம் ஆட்கொள்ளும் வித்தகர்தாள் பாடி நீராடுவோம்

ஓர் ஒருகால் ‘ எம்பெருமான் ’ என்றென்றே,
[நம்பெருமான்
சீர்ஒருகால் வாய்ஓவாள், சித்தம் களிகூர,
நீர் ஒருகால் ஓவா நெடுந்தாரை கண்பனிப்பப்,
பார் ஒருகால் வந்தனையாள், விண்ணோரைத் தான்-
[பணியாள்;
பேரரையற்(கு) இங்ஙனே பித்தொருவர் ஆமாறும்
ஆர்ஒருவர் ? இவ்வண்ணம் ஆட்கொள்ளும் வித்தகர்-
வார்உருவப் பூண்முலையீர்! வாயார நாம்பாடி, [தாள்,
ஏர்உருவப் பூம்புனல்பாய்ந்(து) ஆடேலோர்
[எம்பாவாய்.

பதவுரை

[ஒருத்தியை நோக்கி வேறொருத்தி கூட்டத்தின் சார்பாகப் பேசுகிறாள்.]

| | | |
|---|---|---|
| வார் உருவப் பூண் முலையீர் ! | - | ஆபரணம் அணிந்த மார்பு உடையவர்களே ! |
| ஓர் ஒருகால் | - | இடையிடையே ஒவ்வொரு தடவை |
| ‘ எம்பெருமான் ’ என்றென்றே நம்பெருமான் சீர் | - | ‘ எம்பெருமான் ’ என்று என்று நம்பெருமானுடைய சிறப்பை |
| ஒருகால் வாய் ஓவாள், | - | ஒரு பொழுதேனும் ஓய்வு ஒழிவு இல்லாமல் சொல்வதில் வாய் ஓயாதவளாகி, |
| சித்தம் களிகூர, | - | சித்தம் மிகவும் மகிழும்படி, |

| | |
|---|---|
| நீர் ஒருகால் ஓவா நெடுந்தாரை கண் பனிப்ப, - | ஒரு பொழுதேனும் ஒழிவு இல்லா மல் கண்கள் நீர்த்தாரையை நீளச் சொரிய, |
| பார் ஒருகால் வந்தனையாள் - | ஒரே ஒரு முறை பூமியில் இப்படிப் பிறந்திருக்கிருள் என்று சொல் லத் தோன்றுகிற அந்தப் பெண், |
| விண்ணோரைத் தான் பணியாள்,- | விண்ணவர்களில் ஒருவரையும் பணி யாதவளாய், |
| பேரரையர்கு இங்ஙனே பித்து ஒருவர் ஆமாறும் ஆர் ஒருவர் ?- | பேரரசனுகிய ஆண்டவனிடம் ஒரு வர் காதற்பித்துக் கொண்டிருப் பதும் இவ்வாறோ என்று சொல் லும்படி வேறு ஆர் ஒருவரே இருக்க முடியும் ? |
| இவ்வண்ணம் ஆட்கொள்ளும் வித்தகர் தான் வாயார நாம் பாடி, - | இவ்வண்ணம் பித்துடையவராக்கி ஆட்கொள்ளும் திறமையுள்ள இறைவனது திருவடிகளை நாம் வாயாரப் பாடி, |
| ஏர் உருவப் பூம்புனல் பாய்ந்து ஆடு. - | சிறந்து பொலிவும் அழகு பொருந் திய நீருள் பாய்ந்து ஆடு. |

## விளக்கம்

பக்திப் பித்து ஏறிய ஒருத்தியின் நிலையை வருணித்து, இப்படி அவளைப் பித்தேறச் செய்த இறைவனுடைய திருவடி களைப் பெண்களே ! நாம் வாயாரப் பாடி இந்த அழகான பூம் புனலில் பாய்ந்து நீராடுவோம் என்று கன்னியர் கூட்டத்தின் சார்பாக ஒருத்தி பேசுகிருள்.

'எம்பெருமான்' என்று என்று இடையிடையே ஒவ் வொரு தடவையும் இறைவனுடைய சிறப்புக்களைச் சொல்லிக் கொண்டிருக்கிருளாம் ஒருத்தி. ஒழிவு இல்லாமல் வாய் ஓயாது அப்படிச் சொல்லிக் கொண்டிருக்கிருள் என்று அவளைக் குறிப் பிடுகிருள்.

அவள் சித்தத்தில் களிப்பு எப்படி நிறைந்திருக்க வேண்டும்! தாரை தாரையாக ஆனந்தக் கண்ணீர் வடித்த வண்ணமாயிருக்கிருளாம்.

இவளைப் 'பார் ஒருகால் வந்தனையால்' என்று குறிப்பிடுவது கூர்ந்து நோக்கத்தக்கது. விண்ணுலகத்திலிருந்து இப்போது தான் நழுவி இம் மண்ணுலகத்திற்கு வந்தவள் போலக் காணப் படுகிருளாம். இப்படிப் பூமியில் வேறு எவரும் இருக்க முடியாது என்பது குறிப்பு. அழகிலும் அன்பிலும் நிகரற்றவள் என்ற குறிப்பையும் இந்தச் சொற்றொடரில் காணலாம்.

விண்ணிலிருந்து இப்படி நழுவி வந்தவள் விண்ணோரைப் பணிவதில்லையாம். பேரரசன்மீது அன்பு கொண்டவர் குறுநில மன்னர்களை லட்சியம் செய்வது உண்டா?

இப்படி இவளைப் பித்தேறச் செய்த வித்தகர் யாரோ அவருடைய திருவடிகளை வாயார நாம் பாடி இந்த அழகிய பொய்கையில் நீராடுவோம் என்கிருள்.

விசேஷ உரை

வாய் ஓயாது நம் பெருமான் சீரைச் சொல்லிக் கொண்டிருக்கும் போது, இடையிடையே 'எம்பெருமான்,' 'எப்பெருமான்' என்று சொல்லிக் கொள்கிருளாம். வாய் சொல்ல முடியாததைக் கண்ணீர்த் தாரை சொல்லி முடிக்கிறதாம்.

இத்தகைய கோலத்தில் இவள் விண்ணின் உச்சியிலிருந்து நழுவிவந்த ஒரு மின்னற்கொடி போலத் தோன்றுகிருளாம். தலையன்பு என்ற ஒளியுடன் உணர்ச்சி வசப்பட்டிருக்கும் இவளது உயிர்த்துடிப்பு மின்னலின் துடிப்பாகத் தோன்றுகிறது மற்றைப் பெண்களுக்கு.

ஏர் உருவப் பூம் புனல் என்பது பொய்கையின் ஓர் அழகான சொற் சித்திரம். நோக்கியவர்களுக்கு இனிமையும் அழகும் வாய்ந்த காட்சியளித்து நீராட வேண்டுமென்ற ஆசையைத்

தோற்றுவிக்கும் பொய்கையின் வசீகர நிலையைச் சுட்டிக் காட்டுகிறது சொற்றொடர்.

உள்ளுறை

இவ்வுலகில் இருந்துகொண்டே இந்தப் பிறவித் துயர்களி லும் ஒட்டாமல் சிவானந்தத்தை அனுபவிக்கும் ஆத்மாவின் நிலை யைத் தலையன்பு மிகுந்தும் உணர்ச்சி வசமாகியும் உள்ள ஒரு பெண்ணின் நிலையில் வைத்துப் பேசுகிறது இப்பாட்டு.



## 16

மழைப் பாட்டு (அருளைப் போல் மழை பொழிக).

முன்இக் கடலைச் சுருக்கி எழுந்(து), உடையாள்
என்னத் திகழ்ந்(து), எம்மை ஆளுடையாள் இட்டி-
[டையின்
மின்னிப் பொலிந்(து),எம் பிராட்டி திருவடிமேல்
பொன்னஞ் சிலம்பில் சிலம்பித், திருப்புருவம்
என்னச் சிலைகுலவி, நந்தம்மை ஆளுடையாள்-
தன்னில் பிரிவிலா எம்கோமான் அன்பர்க்கு
முன்னி, அவள்நமக்கு முன்சுரக்கும் இன்னருளே
என்னப் பொழியாய் மழைஏலோர் எம்பாவாய்.

பதவுரை

[மழையை நோக்கிக் கன்னியர் சொல்லுகிறார்கள்.]

| | |
|---|---|
| முன் இக் கடலைச் சுருக்கி - | மேகமே! நீ எங்கள் கண்முன்னே இக்கடல் நீரைச் சுருக்கிக் கொண்டு,--அதாவது, தொகுத்து வைத்துக் கொண்டு |
| எழுந்து, - | வானவீதியில் எழுந்து, |
| உடையாள் என்னத் திகழ்ந்து, - | எங்களைப் பொருளாக உடைய அம்மையின் நீலத் திருநிறம் போலத் திகழ்ந்து, |
| எம்மை ஆளுடையாள் இட்டிடையின் மின்னிப் பொலிந்து, - | எம்மை அடிமையாக உடையவளது சிற்றிடைபோல மின்னிப் பொலிவு பெற்று, |
| எம்பிராட்டி திருவடிமேல் பொன்னஞ் சிலம்பில் சிலம்பி,- | எங்கள் பிராட்டியின் திருவடிமேல் விளங்கும் அழகிய பொற்சிலம்பு ஒலிப்பதுபோல் இடி இடித்து, |

| | | |
|---|---|---|
| திருப்புருவம் என்னச் சிலை குலவி, | - | அவளுடைய அழகிய புருவம்போல வில்லை வளைத்து, |
| நந்தம்மை ஆளுடையாள்--தன்னில் பிரிவிலா எம்கோமான் | - | நம்மை அடிமை கொண்டிருக்கும் அன்னையை விட்டுப் பிரிதல் இல்லாத எமது தலைவனுடைய |
| அன்பர்க்கு முன்னி, | - | அன்பர்களுக்கு நாம் அருள்செய்ய வேணுமென்று நினைந்து, |
| அவள் நமக்கு முன்சுரக்கும் இன்னருளே என்ன | - | அந்த அம்மை நமக்குமுன் பொழி கின்ற இன்னருள் போல |
| பொழியாய் மழை | - | நீ மழை பொழிவாயாக. |

விளக்கம்

'மழையே! மழையே! வா, வா' என்று குழந்தைகள் கூடி நின்று பாடுவதுண்டல்லவா? அப்படியே, 'மார்கழி நோன்பு' என்ற விரதத்தை அநுஷ்டித்துப் பஜனை செய்துவந்த பெண்களும் 'கர்ப்போட்ட'க் காலத்தில் கருக்கொண்ட மேகங்கள் தெற்கு முகமாய் ஓடிவருவது கண்டு உற்சாகமாக, 'மழையே! நீ பெய்ய வேணும்; நாடு செழிக்க வேணும்' என்று பாடினார்கள். இப்படிப்பட்ட பாட்டு ஒன்று ஆண்டாள் திருப்பாவையிலும் காணப்படுகிறது.

ஆகாசத்தைப் பார்த்தால் ஒரு கருங்கடலே அப்படி மேலே வந்து கிடப்பதுபோலத் தோன்றுகிறது. 'மேகமே! நீ போய்க் கடலைச் சுருக்கி வானவீதியில் இழுத்துக்கொண்டு வந்துவிட்டாய்!' என்று சொல்லத் தொடங்குகிறார்கள் பெண்கள்.

மேகங்களின் கருமையே மழை வளத்திற்கு அறிகுறியாயிருப்பதால், அந்த நிறத்திற்கு உமாதேவியின் அருள்வடிவத்தை ஒப்பிட்டு, 'எங்கள் தாய்தான் இப்படி வந்து காட்சி தருகிறாள்!' என்று நாங்கள் எண்ணும்படி வரவேணும் என்கிறார்கள்.

கருமேகங்களுக்கிடையே மின்னல் வெட்டுமல்லவா பளிச்சுப் பளிச்சென்று? அந்த மின்னலும் தேவியைத் தான்

ஞாபகப் படுத்துகிறதாம். 'இப்படித்தான் வரவேணும், மேகமே! தேவியின் இடைபோல மின்னிக் கொண்டு' என்கிறார்கள்.

கண்ணைப் பறிக்கும் மின்னலுக்குப் பின் சில சமயங்களில் இடியிடிக்கும். தாயின் கொலுசு பாதசரங்கள் ஒலி செய்வதைக் கேட்டுக் குழந்தைகள் சந்தோஷப்படுவதில்லையா?

ஒரு சமயம் மேகத்திற்கிடையே வானவில் அழகாய்க் கிடக்கிறது. சரி; அதிலே தோன்றுவது தேவியின் அழகிய புருவம் தானும்.

இப்படி யெல்லாம் தேவியை ஞாபகப்படுத்தும் மேகம் மழையாகப் பெய்யும்போது, தாயின் கருணையே இறங்கி வருவதுபோலத் தோன்றுகிறது, இவர்களுடைய பக்தி உள்ளங்களுக்கு.

திருவருள் மழைபோல் இறங்குகிறது அன்பர்மீது என்ற கொள்கை யுடையவர்கள், மழை அருள்போல் இறங்கவேணுமென்று கூறுவது எவ்வளவு பொருத்தமாயிருக்கிறது!

விசேஷ உரை

இந்த மழைப் பாட்டிலே மேகம் மின்னல் இடி வானவில் மழை எல்லாம் பராசக்தியை நினைப்பூட்டுகின்றன, தேவியின் அடியார்களுக்கு.

மாணிக்கவாசகரின் மழைப்பாட்டு ஓர் அற்புதமான சப்த சித்திரம். இதில் பொருளழகையும் வென்றுவிடுகிறது ஓசையின்பம்.

மேகக் கூட்டத்தினிடையே பெண்கள் உமாதேவியின் அழகையும் அருளையும் கண்டு களித்ததுபோல், இந்தப் பாட்டிலே நாம் கவிதா தேவியின் அழகையும் அருளையும் பார்த்துப் பார்த்து ஆனந்திக்கிறோம்.

நாடு செழிக்க மழையையும், இல்லறம் நடத்த நல்ல கணவரையும் விரும்பும் பெண்கள் தங்களுடைய ஆத்ம தாபத்தையும் பிறருடைய ஆத்ம தாபத்தையும் ஒருங்கே போக்கும் பக்த மணிகளை நினைவூட்டுகிறார்கள்.

தான் அறப் பெய்து மாய்ந்து போகும் மேகம் அருளுக்கும் தியாகத்திற்கும் நினைவுக்குறி. தியாகத்திலே மாண்டு போவோரே உயிரோடிருப்பவர்கள் என்ற உண்மையை மேகம் நினைவூட்டுகிறது.



## பெருமானைப் பாடிப் பூம்புனல் ஆடுதல்

செங்கண் - அவன்பால், திசைமுகன்பால், தேவர்-
எங்கும் இலாததோர் இன்பம்நம் பாலதா, [கள்பால்,
கொங்குண் கருங்குழலி! நந்தம்மைக் கோதாட்டி,
இங்குநம் இல்லங்கள் தோறும் எழுந்தருளிச்
செங்கமலப் பொற்பாதம் தந்தருளும் சேவகனை,
அங்கண் அரசை, அடியோங்கட்(கு) ஆரமுதை,
நங்கள் பெருமானைப் பாடி நலம்திகழப் [வாய்.
பங்கயப் பூம்புனல்பாய்ந்(து) ஆ(டு)எலோர் எம்பா-

### பதவுரை

| | | |
|---|---|---|
| கொங்கு உண் கருங்குழலி! | - | மணம் ஊட்டப்பெற்ற கூந்தலை யுடைய பெண்ணே! |
| செங்கண்-அவன்பால், | - | சிவந்த கண்களையுடைய திருமாலி டத்தும் |
| திசை முகன் பால், | - | நாலு திசைகளுக்கும் நாலு முகங் களையுடைய நான்முகக் கடவு ளிடத்தும், |
| தேவர்கள் பால் | - | இந்திரன் முதலான தேவர்களிடத் தும் |
| எங்கும் இலாததோர் இன்பம் | - | வேறு எவரிடத்தும் இல்லாத ஒப் ற்ற இன்பமானது |
| நம் பாலதா | - | அடியவர்களாகிய நம்மிடத்தாகும் படி |
| நந்தம்மைக் கோதாட்டி, | - | நம்மை மாசு களைந்து சீராட்டி |
| இங்கு நம் இல்லங்கள் தோறும் எழுந்தருளி | - | இங்கே நம்முடைய வீடுகள் தோறும் அடியவர்களுடன் எழுந்தருளி |

| | | |
|---|---|---|
| செங்கமலப் பொற்பாதம் தந்தருளும் சேவகனை, | - | செந்தாமரை மலர் போன்ற அழகிய திருவடியைத் தந்தருளும் வீர மூர்த்தியை, |
| அங்கண் அரசை, | - | குளிர்ந்த அழகிய கருணை நோக்கினைத் தன் கண்களில் தோற்றுவிக்கும் தலைவனை, |
| அடியோங்கட்(கு) ஆரமுதை | - | அடியவர்களாகிய நமக்கு ஆரமுதம் போன்றவனை |
| நங்கள் பெருமானைப் பாடி | - | எங்கள் பெருமானைப் போற்றிப் பாடி |
| நலம் திகழ | - | நன்மை விளங்க |
| பங்கயப் பூம்புனல் பாய்ந்து ஆடு. | - | அழகிய தாமரைப் பொய்கையில் பாய்ந்து நீராடுவாயாக. |

விளக்கம்

செருக்குடன் முனைந்து நிற்கும் தேவர்கள் அடைய முடியாத இன்பம் அடியவர்களுக்கு உண்டாகுமாறு இறைவன் அருள் செய்கிறான் என்பதும், அவன் அன்பர்களின் இருப்பிடங்களுக்கு எழுந்தருளி அருளுக்கு அறிகுறியான திருவடி தரும் சேவகன் என்பதும், அவனைப் பாடிப் பூம்புனல் ஆடுவோம் என்பதும் திரண்ட பொருள்.

சிவானுபவப் பேரின்பம் 'நாம் அறிந்தோம்' என்று செருக்கித் திரிபவர்களுக்குக் கிடைப்பதில்லை; எளியவர்களாகிய அன்பர்களுக்கே சித்திக்கிறதாம்.

இந்தப் பேரின்பத்தை அநுபவதற்காக இறைவன் அடியவர்களிடம் உள்ள குறைகளைக் களைகிறான். செருக்குள்ள விண்ணவர்களைப் புறக்கணித்து, தாழ்ந்து பணிந்து பணி புரியும் எளியவர்களின் இல்லங்கள் தோறும் தானே எழுந்தருளித் தன் பொன்னடிகளை வலியத் தந்து ஆட்கொள்கிறானாம்.

இவனைச் 'சேவகன்' என்றும், 'அரசு' என்றும், ஆரமுது என்றும், நங்கள் பெருமான் என்றும் இக் கன்னியர்கள் பாராட்டுகிறார்கள்.

நன்மை பெற்றுத் திகழும் பொருட்டு இந்த இறைவனைப் பாடித் தாமரைப் பொய்கையில் மார்கழி நீராடுவோம் என்கிறார்கள்.

## விசேஷ உரை

கோதாட்டிச் சீராட்டுவது இறைவன் அருள். இப்படிச் சீராட்டிச் சிவானுபவப் பேரின்பத்தை அடியவர்களுக்கு அருளுவது இறைவன் செய்யும் தொண்டு என்ற குறிப்பைச் சேவகன் என்ற சொல்லின் உட்பொருளாகக் காணலாம்.

இறைவனை அன்பால் அன்றி வேறு எந்த வழியிலும் பெற முடியாது என்ற குறிப்பு இப் பாட்டில் வற்புறுத்தப்படுகிறது.

## உள்ளுறை

நமக்கு மெய்யறிவு பிறந்ததும், நாம் மெய்யன்பர் ஆனதும் இறைவன் இந்த உலகிலேயே நமது உள்ளக் கோயில்களில் தான் எழுந்தருளி யிருப்பதை நமக்குப் பலப்படுத்தித் தன் கருணை நோக்கால் வசப்படுத்திக் கோதாட்டிச் சீராட்டுகிறான்.

இறைவன் போகங்களாகிய குற்றங்களுக்கு நம்மை என் உட்படுத்திப் பிறகு கோதாட்டுகிறான்? அழுக்கு வேட்டியைத் தூய்மை செய்ய உவர் மண்ணைக் கலப்பது போலத்தான் போகங்களுக்கும் நம்மை உட்படுத்திக் கோதாட்டுகிறான் என்பர்.



## 18

*தலைவன் கழல்பாடிப் பூம்புனல் பாய்ந்து ஆடுதல்.*

அண்ணா மலையான் அடிக்கமலம் சென்(று)
[இறைஞ்சும்
விண்ணோர் முடியின் மணித்தொகைவீ(று) அற்றற்-
[போல்,
கண்ணார் இரவி கதிர்வந்து கார்கரப்ப,
தண்ணார் ஒளிமழுங்கித் தாரகைகள் - தாம்அகலப்
பெண்ணாகி ஆணாய் அலியாய்ப், பிறங்கொளிசேர்
விண்ணாகி, மண்ணாகி, இத்தனையும் வேறாகிக்,
கண்ணார் அமுதமுமாய் நின்றான் கழல்பாடிப்
பெண்ணே! இப் பூம்புனல்பாய்ந்(து) ஆ(டு)எலோர்-
[எம்பாவாய்.

### பதவுரை

| | | |
|---|---|---|
| பெண்ணே! | - | தலைவியே! |
| அண்ணாமலையான் அடிக்கமலம் சென்று இறைஞ்சும் | - | திருவண்ணாமலையில் கோயில் கொண்டிருக்கும் இறைவனுடைய திருவடித் தாமரைகளில் போய் வணக்கும் |
| விண்ணோர் முடியின் மணித் தொகை | - | தேவர்களின் மகுடத்தில் இழைத்திருக்கும் இரத்தினக் கூட்டங்கள் |
| வீறு அற்றாற் போல், | - | அந்தத் திருவடி ஒளி முன் தமக்குள்ள ஒளியை இழந்தாற்போல, |
| கண் ஆர் இரவி | - | உலகத்திற்குக் கண்ணாக அமைந்த சூரியனின் |
| கதிர்வந்து கார்கரப்ப, | - | கிரணங்களுக்கு முன்வந்து இருள் மறையவும், |

| | |
|---|---|
| தண் ஆர் ஒளிமழுங்கித் தாரகைகள் தாம் அகல, - | நட்சத்திரக் கூட்டங்கள் தம் குளிர்ந்த ஒளி மழுங்கித் தாம் தோற்றம் பெறாமல் மறைந்து போகவும், அப்போது நாம் |
| பெண்ணாகி ஆணாய் அலியாய்ப், பிறங்கு ஒளிசேர் விண்ணாகி, மண்ணாகி, இத்தனையும் வேறாகிக், கண் ஆர் அமுதமுமாய் நின்றான் கழல்பாடி, - | பெண்ணாகியும் ஆணாகியும் அலியாகியும், விண்ணாகியும் மண்ணாகியும், தான் அவற்றின் வேறாகியும்; கண் நிறைந்த அமுதவடிவாகியும் நிலைபெற்றிருக்கும் இறைவனுடைய திருவடியைப் பாடி, |
| இப் பூம்புனல் பாய்ந்து ஆடு. - | இந்த அழகிய நீர்நிலையில் பாய்ந்து குதித்து நீராடுவாயாக. |

## விளக்கம்

அண்ணாமலையானைத் தேவர்கள் தரிசிக்க வருகிறார்களாம். அவர்கள் ஒளி மயமான அடிக் கமலத்தில் சென்று வணங்குகிறார்கள். இந்தத் தேவர்கள் தலையில் மகுடம் தரித்திருக்கிறார்கள். மகுடங்களில் இரத்தினங்கள் இழைக்கப் பெற்றிருக்கின்றன. ஆனால் இந்த முடி மணிகள் எல்லாம் அடிக் கமலத்தின் ஒளியிலே தங்கள் ஒளிகளை இழந்து விடுகின்றன.

அது போலச் சூரியன் முன் இருளும் நட்சத்திரங்களும் மறைந்து போகின்றன. அத்தகைய காலை வேளையில் அந்த ஒளி மயமான இறைவன் திருவடியைப் பாடிப் பங்கயப் பூம்புனல் ஆடுவோம் என்பது பொருள்.

சிவபெருமான் பெண்ணாகி ஆணாகி அலியாகி, விண்ணும் மண்ணுமாகி இருப்பதுடன், இவற்றுக்கெல்லாம் வேறாகியும் இருக்கிறான். எல்லாமாகி இருக்கும் நிலையை இறைநிலை என்றும், எல்லாவற்றையும் கடந்து வேறாகி நிற்கும் நிலையைக் கடவுள் நிலை என்றும் கூறலாம்.

இன்னும் ஒரு நிலை அடியவர்களுக்காக: கண் நிறைந்த அமுதமாக அடியவர்களுக்குக் காட்சி விளங்குவது இந்த நிலை.

## விசேஷ உரை

'அண்ணாமலையான் அடிக்கமலம்' என்று தொடங்கும் இப் பாட்டும் திருவெம்பாவை திருவண்ணாமலையில் இயற்றப் பட்டது என்பதற்குச் சான்றாகும்.

சூரியன் உலகத்திற்குக் கண் ஆவதுபோல், இறைவன் அன்பர் உலகில் கண் நிறைந்த அமுதமாகத் தோற்றமளிக் கிறான்.

ஈறு அற்றாற் போல்: ஈறு என்றால் தனிச் சிறப்பு என்று பொருள் படும். விண்ணோர்களின் முடிகளிலுள்ள மாணிக்க ஜோதி இறைவனது அடிச்சோதிக்கு முன் தனக்குரிய தனிச் சிறப்பை முற்றும் இழந்துவிடுகிறது. சூரியோதயத்தில் இருள் மறைந்து நட்சத்திரங்களின் சிற்றொளியும் மறைந்து எல்லாம் ஒரே சூரிய ஒளியாய்க் காணப்படுவது போல், விண்ணோர்களின் மகுடகோடி ஒளியிழக்க, எல்லாம் இறைவனது அடிச்சோதி யாகவே காண்கிறதாம்.

## உள்ளுறை

சூரியனுக்கு முன் இருள் விலகுவதுபோல் சிவஞான ஒளிக்கு முன் மல இருள் விலகிவிடும். சூரிய ஒளியில் நட்சத்திர ஒளி அடங்கிப் போவது போல் சிவஞானத்தில் உயிர் அழுந் தும். சித்தாந்தக் குறிப்பாகிய இந்த உண்மையை உள்ளுறை பொருளாகக் கருதலாம்.



## 19

### அன்பர் பணிசெய்ய ஆளாக்க வேண்டுதல்

(கைங்கரியப் பிரார்த்தனை)

'உன்கையில் பிள்ளை உனக்கே அடைக்கலம்'
[என்(று)
அங்(கு)அப் பழஞ்சொல் புதுக்கும்எம் அச்சத்தால்,
எங்கள் பெருமான் ! உனக்(கு)ஒன்(று) உரைப்-
[போம், கேள்.
எம்கொங்கை நின்அன்ப ரல்லார்தோள் சேரற்க;
எய்கை உனக்கல்லா(து) எப்பணியும் செய்யற்க;
கங்குல் பகல்எம்கண் மற்றென்றும் காணற்க—
இங்கிப் பரிசே எமக்(கு)எம்கோன் ! நல்குதியேல்,
எங்(கு)எழில்என், ஞாயி(று) எமக்கு ? ஏலோர் எம்-
[பாவாய்.

பதவுரை

[மார்கழி நோன்பு என்ற பாவை நோன்பு முற்றிய காலத்தில் மார்கழி நீராடிய எங்களுக்குப் பரிசு தரவேண்டும் என்று கன்னியர் இறைவனைப் பிரார்த்திக்கிறார்கள்.]

| | |
|---|---|
| எங்கள் பெருமான் ! - | எங்கள் பெருமானே ! |
| 'உன்கையில் பிள்ளை உனக்கே அடைக்கலம்' என்று அங்கு அப் பழஞ்சொல் - | 'உன் கையில் பிள்ளை உனக்கே அடைக்கலம்' என்னும் பழமொழியை |
| புதுக்கும் எம் அச்சத்தால், - | எங்களுடைய அச்சத்தால் புதுப்பித்துக் கொள்ளும் நாங்கள் |
| உனக்கு ஒன்று உரைப்போம் கேள் ! - | உனக்கு ஒரு விண்ணப்பம் செய்து கொள்கிறோம், கேட்டருள்வாயாக |

| | |
|---|---|
| எம் கொங்கை நின் அன்பர் அல்லார் தோள் சேரற்க; - | எமது கொங்கை உன்னுடைய அன்பர் அல்லாதாருடைய தோள்களைத் தழுவாது ஒழிக; |
| எம் கை உனக்கு அல்லாது எப்பணியும் செய்யற்க; - | எமது கைகள் உனக்கு அன்றி வேறு எவருக்கும் எத்தகைய பணியும் செய்யாது ஒழிக; |
| கங்குல் பகல் எம்கண் மற்றொன்றும் காணற்க— - | இரவும் பகலும் எங்கள் கண்கள் உன்னையன்றி வேறொன்றையும் காணாது ஒழிக— |
| இங்கு இப்பரிசே எமக்கு எம்கோன்! நல்குதியேல், - | இங்கே இந்தப் பரிசு அல்லது தன்மையையே எங்கள் தலைவனாகிய நீ எங்களுக்கு அருள் செய்வாயாகில், |
| எங்கு எழில் என், ஞாயிறு எமக்கு? - | எமக்குச் சூரியன் கிழக்குத் திக்கில் அன்றி வேறு எந்தத் திசையில் உதித்தாலும் எமக்கு என்ன கவலை? |

## விளக்கம்

கன்னியர் கூட்டத்தின் கைங்கரியப் பிரார்த்தனை இது. 'உன் கையில் பிள்ளை உனக்கே அடைக்கலம்' என்ற பழமொழி ஆதியில் திருமணக் காலத்தில் பெற்றோர் மணமகனை நோக்கிக் கூறிவந்தது என்று கருதுவோர் உண்டு.

இந்தப் பழமொழியை, மணம் நிகழப் பெறாதவர்களும் நல்ல கணவர்கள் வேண்டும் என்ற கருத்துடையவர்களுமாகிய கன்னியர்கள் இறைவனைக் குறித்துச் செய்யும் பிரார்த்தனையில், புதுமையாக்கிப் பயன்படுத்திக் கொள்ளுகிறார்கள். சிவபெருமானுக்கு அன்பர்களாக இல்லாதவர்களை மணந்துகொள்ள நேரிடுமோ என்பது இவர்கள் அச்சம்.

## விசேஷ உரை

இந்த விண்ணப்பத்தை மூன்று பகுதிகளாகப் பிரித்துப் பார்க்கலாம்,—முதற் பகுதி இடைப் பகுதி இறுதிப் பகுதி

என்பதாக. சிவனடியார்களையே கணவராக அடைய வேண்டும் என்பது விண்ணப்பத்தின் முதற்பகுதி.

இறைவனுக்கே பணிபுரிய வேண்டும் என்பது விண்ணப் பத்தின் இடைப் பகுதி. இறைவன் பணியில் அன்பர் பணியும் அடக்கம் தான்.

விண்ணப்பத்தின் இறுதிப் பகுதியில் அல்லும் பகலும் தங்கள் கண் இறைவனையே காண வேண்டும் என்று பிரார்த்திக் கிறார்கள். இரவிலும், எந்த அடர்ந்த இருளிலும் காண்பது அகக் கண் என்பது குறிப்பு. 'இமையாத கண்ணால் இருள் அகல நோக்கு'வது அகக் கண் பார்வை.

உள்ளுறை

பசுக்கள் என்று சொல்லப்படும் ஆத்மாக்களெல்லாம் பசு பதியாகிய ஆண்டவனுக்கு அடைக்கலப்பொருள்.



## 20

### ஐந்தொழில், அறுவகைக் காவல், எட்டுப் போற்றி

போற்றி ! அருளுக,நின் ஆதியாம் பாதமலர் ;
போற்றி ! அருளுக,நின் அந்தமாம் செந்தளிர்கள்;
போற்றி! எல்லாஉயிர்க்கும் தோற்றமாம் பொற்பாதம்;
போற்றி! எல்லாஉயிர்க்கும் போகமாம் பூங்கழல்கள்;
போற்றி ! எல் லாஉயிர்க்கும் ஈறும் இணையடிகள் ;
போற்றி ! மால் நான்முகனும் காணாத புண்டரிகம் ;
போற்றி ! யாம் உய்யஆட் கொண்டருளும் பொன்-
[மலர்கள் ;
போற்றி ! யாம் மார்கழிநீ ரா(டு)ஏலோர் எம்பாவாய்.

பதவுரை

[இறைவனே ! உன் திருவடி மலர்களை எமக்கு அருளி எங்களைப் பாதுகாப்பாயாக என்பது இறுதிப் பிரார்த்தனை. இந்தப் பாதுகாப்பைப் பெற்றுகொண்டு மார்கழி நீராட்டத்தையும் போற்றிப் பாடி ஆடி வரவேண்டும் என்பது கன்னியர் ஆசை.]

| | |
|---|---|
| போற்றி ! அருளுக, நின் ஆதியாம் பாதமலர் ; - | இறைவனே ! உன் பாதமலர்கள் ஆதியாக உள்ளன. அவற்றை எங்களுக்கு அருளிப் பாதுகாப்பாயாக ; அத் திருவடிகளுக்கு வணக்கம். |
| போற்றி ! அருளுக, நின் அந்தமாம் செந்தளிர்கள் ; - | உன் சிவந்த தளிர் அடிகள் எல்லாப் பொருள்களுக்கும் அந்தமாகவும் இருக்கின்றன. அந்தச் செவ்விய திருவடிகளால் எம்மைக் காத்தருள்வாயாக ; அத் திருவடிகளுக்கு வணக்கம். |

போற்றி! எல்லா உயிர்க்கும் தோற்றமாம் பொற்பாதம்; - எல்லா உயிர்களும் தோன்றுவதற்கு இடமாகிய உன் பொன்னடிகள் எம்மைக் காத்தருள்க; அத்திருவடிகளுக்கு வணக்கம்.

போற்றி! எல்லா உயிர்க்கும் போகமாம் பூங்கழல்கள்; - உயிர்களுக்கெல்லாம் ஏற்றவிதமாகப் போகங்களை அருளும் அழகிய உன் திருவடிகள் எம்மைக் காக்க; அத் திருவடிகளுக்கு வணக்கம்.

போற்றி! எல்லா உயிர்க்கும் ஈறும் இணையடிகள்; - எல்லா உயிர்களும் ஒடுங்குவதற்குக் காரணமான உன் இணையடிகள் எம்மைக் காக்க; அந்த இணையடிகளுக்கு வணக்கம்.

போற்றி! மால் நான்முகனும் காணாத புண்டரிகம்; - திருமாலும் பிரமதேவனும் காணாத திருவடிகள் எம்மைக் காக்க; செந்தாமரை போன்ற அந்தத் திருவடிகளுக்கு வணக்கம்.

போற்றி! யாம் உய்ய ஆட்கொண்டருளும் பொன்மலர்கள்; - பொன்மலர் போன்ற திருவடிகள் நாங்கள் உய்யும் பொருட்டு வந்து எங்களை ஆட்கொண்டருளுகின்றன; இத் திருவடிகளுக்கு வணக்கம்.

போற்றி! யாம் மார்கழி நீராடு - நாங்கள் நீராடுகின்ற இந்த மார்கழி நீர் எம்மைக் காப்பதாக; இந்த மார்கழி நீருக்கும் வணக்கம்.

## விளக்கம்

எல்லா உயிர்களுக்கும் ஆதியாய், அந்தமாய், தோன்றும் இடமாய், போகங்கள் விளைவிக்கும் இடமாய், முடிவிடமாய் உள்ள திருவடிகள் பிரமனும் திருமாலாலும் காண முடியாத பெருமை வாய்ந்தன. எனினும் அத் திருவடிகள் எம்மை எல்லாம் ஆட்கொள்ளும் பொன்னடிகள் என்பது இக் கன்னியர் கூற்று.

அந்தத் திருவடிகளைப் போற்றுகிறோம், போற்றி மார்கழிநீர் ஆடுவோம் என்கிறார்கள்.

எல்லா உயிர்களும் உடல் கொள்வதற்குக் காரணமாகிய திருவடி என்னும் குறிப்பை, 'எல்லா உயிர்க்கும் தோற்றமாம் பொற்பாதம்' என்ற வாக்கில் காண்கிறோம்.

எல்லா உயிர்களும் ஒடுங்குவதற்குக் காரணமாகிய திருவடிகள் என்ற கருத்தை 'எல்லா உயிர்க்கும் ஈறும் இணையடிகள்' என்ற வாக்கில் காண்கிறோம்.

## விசேஷ உரை

புண்டரிகம்: புண்டரீகம் என்ற வட சொல்லுக்கு வெண் தாமரை என்று பொருள். இங்கே மணிவாசகப் பெருமான் புண்டரீகத்தைச் சிவபெருமானது திருவடிகளுக்கு ஒப்பிடுவதால், பொதுவாகத் தாமரை என்ற பொருளிலேயே வழங்குகிறார் என்று சொல்ல வேண்டும்.

மகாவிஷ்ணுவின் நாபிக் கமலம் என்ற உந்தியந் தாமரை எல்லாவற்றையும் ஈன்றது என்பர் வைணவர். சிவபெருமான் திருவடியே எல்லாவற்றையும் தோற்றுவித்தது என்பர் மணிவாசகப் பெருமான். தோற்றுவித்ததுடன், உயிர்களுக்குப் போகங்களை நுகர்விப்பதும் திருவடி என்கிறார்; உயிர்கள் ஒடுங்குமாறு அவற்றிற்கெல்லாம் முடிவிடமாக இருப்பதும் திருவடி என்கிறார்.

## உள்ளுறை

ஐந்தொழிலுக்கும் உரிய சிவபெருமானே முழுமுதற் கடவுள் என்பது உள்ளுறை. இப்பாட்டில் அறுவகைக் காவல் பிரஸ்தாபிக்கப்படுகிறது. எட்டுப் போற்றியையும் காண்கிறோம்.



## பொன் மலர்களும் மாணிக்க மாலையும்

மார்கழி நீராட்டத்தின் சிறப்பைத் தெரிந்து கொண்ட கன்னிப் பெண்கள் குறித்த திருவாதிரை நாளில் நீராட வேண்டுமெனத் தம்முள் கலந்து பேசிக் கொண்டிருந்தார்கள். திருவாதிரை நாள் அதிகாலையில் முன்னம் துயிலுணர்ந்தவர்கள் ஒரு தோழியைத் துயிலுணர்த்த வேண்டிப் பள்ளியறை வாசற்படிக் கருகே நின்று தலைவனான சிவபெருமானின் புகழை எடுத்தோதுகிறார்கள். இப்படித் துயிலுணர்த்தியும் உணராதவளை இகழ்ந்து பேசுவதுபோல் இத்தோழிமீது தங்களுக்குள்ள அன்பை வெளியிடுகிறார்கள். இது திருவெம்பாவையின் முதற் பாட்டு. எழுப்பப் பெற்றவள் கூட்டத்தில் கலந்து கொள்கிறாள் என்பது குறிப்பு.

இரண்டாம் பாசுரத்திலே பெண்களின் கூட்டம் ஒருத்தியைப் பரிகசித்துத் துயிலெழுப்பக் காண்கிறோம். அவளும் பரிகாச எதிர் அம்பு தொடுக்க, இன்னொருத்தி குறுக்கிட்டுக் காலதாமதம் ஏற்படாதபடி வெளியே இருந்து பரிகசித்தவர்களை இடித்து அறிவுறுத்துகிறாள். உள்ளே இருந்தவள் உடனே மன அமைதி பெற்று வந்து கூட்டத்தில் கலந்து கொள்கிறாள் என்பது குறிப்பு.

முத்தன்ன வெண்ணகையாள்—தித்திக்கப் பேசுவாள்—ஒருத்தியைத் துயிலுணர்த்தும் தோழியர்களின் அழகிய பக்தி நிறைந்த சித்தத்திலே நகைச்சுவையும் ததும்பக் காண்கிறோம். இது மூன்றாம் பாசுரம்.

வெளியே இருக்கும் வண்ணக் கிளிமொழியாருக்கும் உள்ளே இருக்கும் ஒளிமுத்துப் புன்னகையாளுக்கும் இடையே பரிகாசமாகத் தொடங்கிப் பரிகாசமாக முற்றுப் பெறும் சம்பாஷணைக் கிடையே பக்திச் சுவை நடுநாயகமாக மிளிரக் காண்கிறோம். இவர்களுக்குச் சிவபெருமான் 'விண்ணுக்கு ஒரு மருந்து' 'வேத விழுப் பொருள்' மட்டுமல்ல, 'கண்ணுக்கு இனியா' னாகவும் தோன்றுகிறான்.

ஐந்தாம் பாசுரத்தில், உள்ளே இருக்கும் தோழியைப் 'பாலூறு தேன் வாய்க் கள்ளி!' என்று வெளியே கூட்டத்தி லிருந்த ஒருத்தி கொஞ்சி அழைக்க, திருவாதிரை நாளுக்கு முன் மார்கழி நீராட்டத்தின் சிறப்பைத் தெரிந்து கொண்டு அது தவறு என்று கருதிய மற்றொருத்தி தடுத்துப் பேசுவதைக் கேட் கிறோம். இப்பாசுரத்தில் சிவபெருமானது கோலமும் (பெரு மையும்) சீலமும் (எளிமைப் பண்பும்) பிரஸ்தாபிக்கப் பெறுகின் றன.

இந்த ஐந்து பாசுரங்களிலும் கதவைத் திறந்து கொண்டு வந்து கூட்டத்தில் கலந்து கொள்ளும் பெண்களைப் பார்க்கி றோம். இந்தப் பெண்கள் எல்லாரும் கூடி வீதியில் செல்லும் போது கலகலவென்று தம்முள் கலந்து உரையாடுவதை ஆறு, ஏழு, எட்டு ஆகிய மூன்று பாசுரங்களிலும் கேட்கிறோம்.

ஆறுவது பாசுரத்திலே, 'நாளை நானே வந்து உங்களை எழுப்புவேன்' என்று உறுதி கூறி அந்த வாக்கை மறந்து உறங் கிப் போய்க் கூட்டத்தினால் எழுப்பப் பெற்று வந்திருக்கும் ஒருத்தி பரிகசிக்கப் பெறுகின்றாள்.

ஏழாம் பாசுரத்திலும் இத்தகைய ஒருத்தியைத் தோழிமார் பரிகசிக்கக் காண்கிறோம். உறக்கம் நன்னெஞ்சத் தொண்டரை யும் 'வன்னெஞ்சப் பேதையர்போல்' செய்து விடுகிறது என்ற கருத்தையும் இப்பாசுரத்தில் காண்கிறோம்.

எட்டாம் பாசுரத்தின் முற்பகுதியில் ஆனந்தமான காலைப் பொழுது ஆனந்தமாக வருணிக்கப் பெறுவதைக் காணலாம். 'இத்தகைய காலைப் பொழுதை உறக்கத்தில் கழித்துவிட லாமோ?' என்று தோழிமார் கேட்கிறார்கள், உறக்க மயக்கம் முற்றும் கலையாது தம்முடன் வந்து கொண்டிருக்கும் ஒருத் தியை நோக்கி.

ஒன்பதாம் பாசுரத்தில் மார்கழிநோன்பின் இரட்டைப் பெரு நோக்கத்தில் அதி முக்கியமான நோக்கம் பிரஸ்தாபிக்கப் படுகிறது. தலைவனாகிய சிவபெருமானை நினைத்துக் கொண்டு, 'உன்னைப் பிரானாகப் பெற்ற நாங்கள் உன் அடியாரையே கண

வராகப் பெற்று உய்யுமாறு அருள்வாய்' என்கிறுர்கள் இக் கன்னிப் பெண்கள். இதைப் பிரார்த்தனை என்று கூறுவதைக் காட்டிலும் சங்கற்பம் என்று குறிப்பிடுவது பொருந்தும்.

இந்தச் சங்கற்பச் செய்யுளுக்குப் பின் கோயிற் பணிப் பிள்ளைகளின் பிரஸ்தாபம் வருகிறது. சிவாலயத்தில் பணிபுரியும் உரிமை பூண்ட கூட்டத்தினர் இப் பெண்பிள்ளைகள். இக் கூட்டத்தினரிடம் கன்னிப் பெண்களின் கூட்டம், இறைவனைப் பாடும் இயல்பு முதலான சில விஷயங்களைக் குறித்து வினவக் காண்கிறோம். அந்தப் பெண்கள் இந்தப் பெண்களுக்குத் தக்க விடை தந்திருக்க வேண்டும் என்று ஊகித்துக் கொள்ளலாம்.

அடுத்த பாசுரத்திலே, இறைவனை நோக்கி, 'உய்யும் வகையெல்லாம் உய்ந்தொழிந்தோம்; இன்றும் அப்படியே எங்களைக் காப்பாய். இதை எங்கள் நீராடலின் பயனாக அருள்வாய்' என்று பெண்கள் வேண்டிக் கொள்கிறுர்கள்.

பன்னிரண்டாம் பாசுரத்திலே, பெண்களின் கூட்டம் 'இறைவனைப் புகழ்ந்து பேசிப் பொற்பாதம் ஏத்திச் சுனை நீராடுவோமாக' என்று பேசிக் கொள்வதைக் கேட்கிறோம்.

அடுத்த பாசுரத்தில் இறைவனுக்கும் இறைவிக்கும் பொய்கைக்கும் சிலேடைகள் அமையக் காண்கிறோம். அம்மையப்பரின் அருட்கடலில் தோய்வதற்கு அறிகுறியாகச் சுனை நீராட்டம் இங்கே பிரஸ்தாபிக்கப்படுகிறது.

பதினான்காம் பாசுரத்திலே நீராடும் பெண்களின் குதூகலம் செய்யுளின் ஓசைப் பொலிவிலேயே சித்தரிக்கப் பெறுகின்றது.

பதினைந்தாம் பாசுரத்தில், இறைவன் காதற்பித்துடையவராக்கி ஆட்கொள்ளுகிறுன் என்ற உண்மை வெளியிடப் பெறுகின்றது. இத்தகைய இறைவனை வாயாரப் பாடிப் பூம் புனல் பாய்ந்து ஆடும் ஆனந்தம் இப்பாட்டிலும் அலையெறியக் காண்கிறோம்.

அடுத்த பாசுரம் மழைப்பாட்டு. அடியவரைக் கணவராகப் பெற்று இல்லறத்தை நல்லறமாக நடத்துவதற்கு நாடு

செழித்திருக்க வேண்டும், அந்தச் செழிப்பிற்குப் பருவ மழை இன்றியமையாதது என்பது குறிப்பு. 'உலக அன்னையாகிய உமாதேவியின் இன்னருள் போல் மழை இறங்கி வரவேண்டும்' என்கிறார்கள்.

பதினேழாம் பாசுரத்தில், இல்லங்கள் தோறும் எழுந்தருளி இன்பமளிக்கும் சேவகனைப் பாடி மார்கழி நீராடுவது பிரஸ்தாபிக்கப் பெறுகின்றது.

பதினெட்டாம் பாசுரத்திலே இறைவன் கழல்பாடி நீராடுவதைப் பிரஸ்தாபிப்பதற்கு முன்; 'அண்ணாமலையான் அடிக் கமலம்' பிரஸ்தாபிக்கப் பெறுவதைக் காண்கிறோம். திருவண்ணாமலையில் திருவெம்பாவை பாடப் பெற்றிருக்கக் கூடும் என்பதற்கு இப்பாட்டையும் ஓர் அகச் சான்றாகக் காட்டலாம்.

அடுத்த பாசுரம் 'உன் கையில் பிள்ளை உனக்கே அடைக்கலம்' என்ற பழமொழியுடன் தொடங்குகிறது. இதில் திருவெம்பாவையின் தனிப்பெருங் கொள்கை வெளியிடப் பெறுவதாகக் கருதலாம்.

இறுதிப் பாசுரத்திலே பெண்கள் இறைவன் திருவடிகளையும் மார்கழி நீரையும் போற்றிப் பாடி ஆடி வருவோம் என்கிறார்கள். இறைவனது இணையடிகள் பொற்பாதம் என்றும், பாதமலர் என்றும், பூங்கழல்கள் என்றும், பொன் மலர்கள் என்றும், செந்தளிர்கள் என்றும் கொஞ்சும் தமிழில் குறிக்கப் பெற்றுள்ளன.

இப் 'பொன் மலர்க'ளுக்குத் திருவெம்பாவை முழுவதும் ஒரு மாணிக்கச் சுடர் மாலையாக அமைவதாய்க் கருதலாம்.

